SHIVAJI
TAMIL WEEKLY

# சிவாஜி

ஞாயிறு வாரப்பதிப்பு

கிராம, சமுதாய நல, கலை, இலக்கியப் பத்திரிகை

SHIVAJI
TAMIL WEEKLY
29 th year
of Publication
*
23—2—1964

அரசியல், தொழில் வள, சமுதாய நல, கலை, இலக்கிய வார இதழ் ஆசிரியர்: திருலோகசீதாராம்

# காங்கிரஸ் இன்றி ஜனநாயகமில்லை?

## விடுதலைப் போரில் செய்த தியாகத்திற்கு இணையானதே இன்று நாம் சகிக்கும் பொருளாதாரக் கஷ்ட நஷ்டங்களும்.

*

## காங்கிரஸை எதிர்ப்பது சர்வாதிகார ஆட்சிக்கே முரண்பாடாகும்.

*

## சிந்தித்துச் செயல் புரியவேண்டும்.

*

சுதந்திரம் என்பது ஆங்கிலேய அதிகாரிகளை ஆட்சியிலிருந்து வெளியேற்றிவிட்டு அந்த இடங்களில் இந்தியர்கள் சிலர் அமர்ந்து அதிகாரம் செய்வதல்ல; உணவில்லாதவர்களுக்கு உணவு, உடையில்லாதவர்க்கு உடை, வீடில்லாதவர்க்கு வீடு, வேலையில்லாதவர்க்கு வேலை என்பதுதான் உண்மையான சுதந்திரம் என்று காந்தியடிகள் வியாக்யானம் செய்தார். அப்படியொரு விளக்கம் அவர் கொடுத்ததனால் தான் காங்கிரஸ் மக்களின் இயக்கமாயிற்று. அதனால் தான் காங்கிரஸ் வளர்ந்தது. அந்த வளர்ச்சியினால்தான் விடுதலைப் போரை உறுதியுடன் நடத்த முடிந்தது. அதன் விளைவாகத்தான் சுதந்திரம் வந்தது.

சுதந்திரம் கிடைத்துப் பதினேழு ஆண்டுகள் முடியப் போகிறதே — காந்தியடிகள் கூறியமாதிரி எல்லோருக்கும் எல்லா சவுகரியங்களும் கிடைத்து விட்டனவா என்ற வினா நியாயமானது தான். இதற்கு வெறும் வார்த்தைகளால் விடை கூறவேண்டிய அவசியம் கிடையாது. விவசாய உற்பத்தி, நீர்ப்பாசன திட்டங்கள், மின்சார வசதி, சாலைகள், பள்ளிக்கூடங்கள், மருத்துவ விடுதிகள், புதிய புதிய தொழிற்சாலைகள் ஆகிய எண்ணற்ற நன்மைகள் இந்த இடைக் காலத்தில் மக்கள் நேரில் அறிந்து கொண்டிருக்கிறார்கள். எனினும் நாட்டில் சுபிட்சம் ஏற்பட்டு விட்டதா என்றால், ஏற்படவில்லையென்று சொல்ல முடியாது.

ஏற்பட்டுள்ள சுபிட்சத்தை நன்கு, பொறுப்புணர்ச்சியுடன் பயன்படுத்திக் கொள்ளும் மனப்பாங்கும் சமுதாய உணர்ச்சியும் மக்களுக்கு ஏற்படவில்லை என்றுதான் கூறமுடியும். இன்னமும் செய்தாக வேண்டிய பல அபிவிருத்திகள் பாக்கியிருக்கின்றனவே என்று வேண்டுமானால் குறைப்பட்டுக் கொள்ளலாம். அதை விட்டு காங்கிரஸ் என்ன சாதித்து விட்டது என்று கண்ணை மூடிக் கொண்டு கேள்வி கேட்டு விட்டால், ஒன்றுமில்லையென்று ஆகிவிடாது.

மற்றொரு முக்கியமான உண்மையையும் நாம் புரிந்து கொள்ள வேண்டும். ஒரு பக்கம் மக்களின் அன்றாட வாழ்வின் சிக்கல்களுக்கு தேசீய அரசாங்கம் பரிகாரம் காண வேண்டியிருப்பது போலவே, எதிர்காலத்தை எண்ணி அடிப்படையான பல நல்ல திட்டங்களையும் அமுலாக்க வேண்டியிருக்கிறது.

ஆமாம் எதிர்காலம் நமது பொறுப்பில்லையென்று கூறிவிட்டு, இன்றைய தொல்லைக்கு மட்டும் வழி என்ன என்று கேட்பதில் பொருளில்லை. ஒவ்வொரு மனிதனும் உழைப்பதும் பொருள் தேடுவதும் அன்றாடப் பிழைப்புக்காக மட்டுமல்ல. தனது பிள்ளைகுட்டிகள் எதிர்காலத்தில் நல்வாழ்வு பெற வேண்டுமே என்பதை எண்ணித்தான் ஒவ்வொருவனும் பொருள் சேர்க்கிறான். சேர்த்த பொருளை முதலீடு செய்கிறான். அந்த முதலீடு அழியாமல் பாதுகாப்பும் தேடுகிறான்.

அரசாங்கம் என்பதும் ஒரு குடும்பம் போலத்தான். மக்களின் இன்றைய தேவைகளை முடிந்த வரையில் சமாளிக்க அது கடமைபட்டிருப்பது போலவே எதிர்கால மக்களின் நல்வாழ்வுக்கு மிகவும் அதிகமான கவனம் செலுத்த வேண்டியிருக்கிறது. நடைபெற்று வரும் ஐந்தாண்டுத் திட்டங்கள் யாவும் இப்படி ஒரு சிறந்த எதிர்காலத்தை எண்ணிச் செய்யப்படும் மகத்தான சேவையாகும்.

ஆட்சிப் பொறுப்பில் காங்கிரஸ் இருந்தாலும், அரசாங்க உத்யோகஸ்தர்களும் மற்ற மக்கள் அனைவரும் பல்வேறு பிரிவைச் சேர்ந்தவர்கள். அத்தனை பேரும் தியாக பரம்பரையைச் சேர்ந்தவர்கள் அல்ல. எனவே கொள்கைகளைப் பற்றி அறியாத இவர்கள், அரசாங்கத்தின் அடிப்படையான உயர்ந்த நோக்கங்களைச் சரியாக நிறைவேற்றி வைக்கும் சக்தி பெற்றிருக்கவில்லை. திட்டங்கள் நல்லவையாக இருந்தாலும் அவற்றை நடத்தி வைப்பவர்கள், அதில் பலவகையிலும் தொடர்பு கொண்டவர்கள் அந்த லட்சிய உணர்ச்சி பெற்றிராவிட்டால் எதிர்பார்க்கும் நன்மைகள் எட்டிப் போய்க் கொண்டிருக்கும்.

ஏழை பணக்காரன் என்ற வேறுபாட்டை அமைதியான முறையில் அகற்றி, சமதர்ம சமுதாயம் உருவாகிக் கொண்டிருக்கும் உண்மையை சாதாரண மக்கள் அறிய மாட்டார்கள். பணக்காரர்களாக இருந்தவர்கள் மேலும் பணக்காரர்களாக முடியவில்லை. அந்த அளவுக்கு அரசாங்கத்தின் பொருளாதாரக் கட்டுப்பாடுகளும், வரி விதிப்புகளும் இருக்கின்றன. இதை பரம்பரையாகச் செல்வம் சேர்த்து வந்து இப்போது திகைத்து நிற்கும் பணக்காரர்கள் அறிவார்கள். அவர்களில் ஒரு சாரார் உலகம் மாறும் போது நமக்கு மட்டும் தனியாக என்ன பாதுகாப்பு வேண்டும். அனைவருக்கும் உணவு, உடை, இருக்கை கிடைக்கும் என்றால் நமக்கும் நமது சந்ததிகளுக்கும் சேர்த்துத்தானே என்று எண்ணுகிறவர்கள்.

இவர்கள் தான் சமதர்ம சமுதாய அமைப்பில் ஈடுபட்டுள்ள காங்கிரஸ் ஸ்தாபனத்தில் கூடியிருந்து உழைக்கும் பணக்காரர்கள். இவர்களை இடதுசாரிப் பணக்காரர்கள் என்று கொள்ளலாம். காங்கிரஸில் பண மூட்டைகள் நிறைந்திருக்கிறார்கள் என்று சுதந்திராக் கட்சியினர் கூறுகிறார்களே அந்தப் பணக்காரர்கள் இவர்கள் தாம். துணிவாகப் புதிய சமுதாயத்தை வரவேற்கவும், தங்கள் பொருளாதாரக் கோட்பாடுகளை மாற்றிக் கொள்ளவும் தயாராகிவிட்ட பணக்காரர்கள் இவர்கள்.

விடுதலைக்குப் பிறகு தாங்களே மனமுவந்து சமஸ்தானங்களை இந்திய அரசாங்கத்தின் பகுதியாக ஒப்படைத்துவிட்டு சாதாரணப் பிரஜைகளாக வாழ முன்வந்த எண்ணற்ற சிற்றரசர்களுக்குச் சமானமானவர்கள் காங்கிரசிலுள்ள பணக்காரர்கள்.

சமதர்ம சமுதாயத்தை விரும்பாமல், அப்படி ஒன்று ஏற்படாமல் தடுத்துவிட வேண்டுமென்பதில் ஊக்கமாக இருக்கும் தனிப்பட்ட பணக்காரர்களும் இருக்கத்தானே செய்வார்கள். அவர்

[3-ம் பக்கம் பார்க்க]

# அந்தமான் தீவுகளில்
# புதிய கடற்கரை நிறுவனம்

முன்பெல்லாம் அந்தமான் என்ற பெயர் நம்முடைய காதில் படும் பொழுது அங்குள்ள ஆயுள் தண்டனை பெற்ற கைதிகளுக்கான சிறைச்சாலைதான் நம் கண் முன்னே வந்து நின்றது. நாட்டின் விடுதலைப் போராட்டத்தில் கலந்து கொண்ட தியாகிகள் பலர் இச் சிறைச்சாலையில் வாடியதும் நம் நினைவுக்கு வருகிறது. நாடு சுதந்திரம் பெற்ற பின்னர் அச்சித்திரம் முழுதும் மாறிவிட்டது.

அந்தமான், நிக்கோபார் தீவுகள் அனைத்தும் இப்பொழுது வங்காளக்குடாக் கடலில் இந்தியாவின் துவாரபாலகர்களாக விளங்குகின்றன. அவற்றை மேலும் அபிவிருத்தி செய்யும் நடவடிக்கைகளில் ஒன்ருக முதன் முதலாக கடற்படை நிறுவனமொன்றும் இன்று துவக்கி வைக்கப்படுகிறது. அந்நிறுவனமான ஐ. என். எஸ். "ஜராவா"வை இந்தியாவின் கடற்படை தளபதி வைஸ் அட்மிரல் பி. எஸ். சோமான் இன்று துவக்கி வைக்கிருர்.

இப்புதிய நிறுவனத்துக்கு அநதமான் தீவுகளில் வசிக்கும் பழங்குடியினமொன்றின் பெயர் இடப்பட்டுள்ளது மிகவும் பொருத்தமானதாகும். மேலும் இந்தியாவின் கடற்படை தளபதியொருவர் இத்தீவுகளுக்கு விஜயம் செய்வதும் இதுவே முதல் தடவையாகும். ஆனல் அட்மிரல் சோமான் வேறு அந்தஸ்துகளை வகித்து வந்த போது கடந்த இருபது ஆண்டு காலத்தில் பல முறை இத்தீவுகளுக்கு விஜயம் செய்திருக்கிருர்.

கடற்படையின் மாமூலான வழக்கத்தின்படி, இக்கடற்கரை நிறுவனம் இந்திய கடற்படையின் கப்பலொன்ருகவே பாவிக்கப்பட்டு அப்படியே பெயரிடப்பட்டிருக்கிறது. இக்கடற்கரை நிறுவனம் கிழக்குக் கரை கம்போடியா நிர்வாகத்தின் கீழ் இருக்கும்; அவருடைய தலைமைக் காரியாலயம் விசாகப்பட்டணத்தில் அமைந்திருக்கிறது. அந்தமான் பகுதியில் இயங்கி வருகிற கடற்படைக் கப்பல்களுக்கு அவசியமான செய்தித் தொடர்பு வசதிகளையும் கப்பல் தள வசதிகளையும் இங்கு அளித்து வரும். இப்பகுதியில் நம் கடற்படையினர் அடிக்கடி கப்பல் பயிற்சி நடவடிக்கை நடத்திவருவதும் இங்கு குறிப்பிடத்தக்கதாகும். நிறுவனம் அளிக்கிற கப்பல் தள வசதிகளின் பலனுக, இப்பகுதியில் நம்முடைய கப்பல்களின் போக்கு வரத்துத் திறன் மேம்பாடு அடைவதுடன், இத்தீவுகளுக்கு அத்தியாவசியப் பண்டங்களை எடுத்துவரும் வாணிபக் கப்பல்களுக்கும் அவசியமான வசதிகள் கிடைத்து வரும் என்றும் எதிர்பார்க்கப்படுகிறது.

மேலும் இந்தியக் குடியரசின் இன்றியமையாத உறுப்புகளாக இடம்பெற்று, புத்துணர்ச்சியுடனும், புதிய பொலிவுடனும் பரிமளித்து வரும் இத்தீவுகளின் பொருளாதார மேம்பாட்டுக்கும் அவை பெரிதும் வகை செய்யும்.

அந்தமான், நிக்கோபார் தீவுகள் கேந்திர ஸ்தலமாக அமையப் பெற்றிருப்பதைக் கவனத்தில் கொள்ளும் பொழுது, இந்நிறுவனத்தின் முக்கியத்துவம் பின்னும் நன்கு விளங்கும். இத்தீவுகளிலிருந்து நம்முடைய கிழக்குக் கடற்கரையைக் கண்காணித்து வருவதும் மிகவும் எளிதாகும். சென்ற உலக மகா யுத்தத்தின் போது ஜப்பானியர்கள் தென் கிழக்காசியாவில் பிரிட்டிஷாருக்கெதிரான தங்களது நடவடிக்கைகளில் இத்தீவுகளின் கேந்திர முக்கியத்துவத்தைப் பூரணமாகப் பயன்படுத்திக் கொண்டது எல்லோருக்கும் நினைவிருக்கும்.

மொத்தம் 3000 சதுர மைல்களுக்கும் அதிகமான பரப்பளவில் அமைந்துள்ள அந்தமான், நிக்கோபார் தீவுகளின் தொகுதியில் சிறிதும் பெரிதுமாக மொத்தம் 225 தீவுகள் அடங்கியுள்ளன. வங்காள விரிகுடா பகுதியில் வில் போன்ற அமைப்பிலான இத்தீவுகள் இந்தியக் கடற்கரையிலிருந்து சுமார் 700 மைல் தூரத்தில் உள்ளன; அவை முக்கியமான வாணிப மார்க்கங்களின் இடைவழியில் அமையப் பெற்றுள்ளதனுல், வெகு காலத்துக்கு முன்னரேயே அவை பற்றித் தெரிந்திருந்தது. இத்தீவுகள் பற்றி கிளாடியஸ் டாலமி (கி. பி. இரண்டாம் நூற்ருண்டு) "அக்மாதே" என்ற பெயரில் குறிப்பிட்டுள்ளார். அரேபிய பிரயாணிகள் ஒன்பதாவது நூற்ருண்டில், "அங்கமானேயன்" என்று அவற்றைப் பெயரிட்டிருந்தனர். அந்தமான் தீவுகள் இனேரோத் யமுனு த்விபா என்ற பெயரிலும், நிக்கோபார் தீவுகள் நக்காவரை. என்ற பெயரிலும் கூட அறியப்பட்டிருந்தன. இத்தீவுகள் பற்றி ராமாயணத்தில் கூடக் குறிப்புகள் உள்ளன. அந்தமான் என்ற பெயர் ஹனுமான் என்ற பெயரிலிருந்து வந்ததாகவும் சில வரலாற்று ஆசிரியர்கள் கூறுகின்றனர்.

பதினேழாவது நூற்ருண்டு கால ஆரம்பத்தில் கிழக்கிந்தியக் கம்பெனி அமைக்கப்பெற்ற பின்னர், காப்டன் பிளேர் என்ற பெயர் கொண்ட கடற்படை சர்வே அதிகாரி ஒருவர், 1789-ம் ஆண்டில் முதல் முதலாக அந்தமான் தீவில் குடியேறினுர். அதையடுத்து இயற்கை அமைப்பைக் கொண்ட மூன்று துறை முகங்கள் கண்டுபிடிக்கப்பட்டு, முறையே போர்ட் பிளேர், ஸ்டீவர்ட் ஸௌன்ட், போர்ட் கார்ன் வாலிஸ் என்று அவை பெயரிடப்பட்டன. இவை மூன்றும் கிழக்குக் கடற்கரையில் அமைந்திருந்தன. பிற்பட்டு அறுபது ஆண்டுகள் கழித்து ஆயுள் தண்டனைக் கைதிகளுக்கான சிறை ஸ்தலமொன்று அங்கு ஏற்படுத்தப்பட்டு, தனித்தனி அறைகளைக் கொண்ட சிறைச்சாலையொன்றும் அங்கு அமைக்கப்பட்டது. இவ்விரண்டும் இப்பொழுது அறவே எடுபட்டுவிட்டன.

நில அமைப்பு, ஜனத் தொகை ஆகிய இரண்டு அம்சங்களைப் பொறுத்த மட்டில், அந்தமான் தீவுகளுக்கும், நிக்கோபார் தீவுகளுக்கும் பெருத்த வேறுபாடுகள் உள்ளன. அந்தமான் தீவில் பெரும்பகுதி ஆதி வாசிகள் ஜராலா, அந்தமானில், ஒங்கேஸ் இனங்களைச் சேர்ந்தவர்களாகும்.

அந்தமானில் பெரும் பகுதி மக்கள் போர்ட் பிளேரில் வசிக்கின்றனர். இத்தீவுகள் வெட்டு மரம் வளம் மிகுந்தவையாகும்; கடற்கரையில் ஒரு கோடியிலிருந்து மற்ருெரு கோடி வரை அடர்ந்த காடுகள் பரவியுள்ளன. சர்க்கார் மேற்கொண்டு வருகிற குடியமைப்புத் திட்டங்கள் பிரதானமாக தெற்கு அந்தமான் பகுதியில் உள்ளன.

இயற்கைக் காட்சிகளிலும், பொதுத் தோற்றத்திலும் கூட நிக்கோபார் தீவுகள், அந்தமான் தீவுகளிலிருந்து பெரிதும் வேறுபட்டுள்ளன. பவழப்பாவைகளும், பனைமரங்களும் நிறைந்த சோலைகளும் கொண்ட அத்தீவுகள் தெற்கு பசிபிக் பகுதியில் உள்ள விடுமுறை ஸ்தலங்கள் போன்று காட்சியளிக்கின்றன. இப்பகுதியில் மக்களின் பெரும்பாலோர் கார்நிக்கோபார் தீவில் வசிக்கின்றனர். ஜப்பானியர் இப்பகுதியில் 1942 லிருந்து 1945-ம் ஆண்டு வரை ஆக்ரமித்து வந்த காலத்தில் அமைத்த விமான தளம் ஒன்று இப்பொழுது இந்திய விமானப் படையினரால் பயன்படுத்தப்பட்டு வருகிறது.



ஸ்ரீ அம்பாள் ஆபீசர் பொடி
அனைவரும் விரும்புவது
10 & 25-கிராம் டின்களிலும் கிடைக்கும்
ஸ்ரீ அம்பாள் & கோ. தங்கசாலை தெரு, மதராஸ்.1.

குழந்தைகளின் புஷ்டிக்கு ரமணீஸ் பேபிக்ரைப்
சகல நோவுகளுக்கு எல்லிஸ்பாம்
காயம் சொரி சிரங்குகளுக்கு சைபால்
தி சௌத் இந்தியன் மான்யுபாக்சரிங் கம்பெனி, மதுரை.



அமிர்தாஞ்சனம்
இப்பொழுது
புதியதொரு சிக்கன
உறையில் கிடைக்கிறது
அமிர்தாஞ்சனம் லிமிடெட். சென்னை, பம்பாய்.

M/s G. RADHAKRISHNA CHETTIAR Sons
Jewellers
TIRUCHY-8.
பவுன் நகைகள்
வெள்ளிப் பாத்திரங்களுக்கு
M/s ஜி. ராதாகிருஷ்ண செட்டியார் - சன்ஸ். திருச்சி-8.
PHONE: 2037
TEL: RELIABLE.
மானேஜிங் பார்ட்னர் R. ஜெயதேவன்

கைத்தறி, பட்டு, நூல் & மில் ஜவுளிகளுக்கு
M.N. நாகேந்திரம் சன்ஸ்
மலைவாசல் ............ திருச்சி.

# தொழில் துறை

தொழில் துறையில் உற்பத்தி பெருகுவதற்கு தொழில் துறைப் பொறி இயல் ஜீவாதாரமானது என்பதை தென் இந்தியாவிலுள்ள யு. எஸ். கான்ஸல் ஜெனரல் டாக்டர் ஆல்பர்ட் பி. பிராங்க்ளின் வலியுறுத்திக் கூறினுர். தொழில் துறை பொறி இயலில் பட்டம் பெறும் மாணவர்கள் புத்தம் புதிய கண்டுபிடிப்புகளில் தொடர்ந்து ஈடுபாடுடையவர்களாக இருக்க வேண்டுமென்று அவர்களை அவர் கேட்டுக் கொண்டார். இது இந்தியத் தொழில் வளர்ச்சிக்குப் பெரிதும் துணை செய்யுமென்றும் அவர் வற்புறுத்தினுர்.

தேசிய உற்பத்தித் திறன் கவுன்சில் நடத்திய பத்து மாத தொழில் துறை பொறி இயல் பயிற்சியின் முடிவுக் கூட்டத்திற்கு டாக்டர் பிராங்க்ளின் தலைமை தாங்கிப் பேசினுர். தாஷப்பிரகாஷ் ஹோட்டலில் நடைபெற்றது. பயிற்சித் திட்டம் யு எஸ். எ. ஐ. டி. என்ற அமெரிக்க அரசாங்கத்தின் உதவி நிலையம், தேசிய உற்பத்தித் திறன் கவுன்சில் ஆகியவற்றின் கூட்டு ஆதரவில் நடைபெற்றது.

கீழ்த்திசையும் மேல் திசையும் சந்திக்கும் இந்தக் கூட்டத்திலே தம்மைப் போன்ற அரசாங்கப் பிரதிநிதிகள் வெறும் பார்வையாளர்களாகவே இருக்க முடியும் என்றும், ஆனல் இந்தியப் பண்பாட்டில் திளைத்து வளர்ந்து அமெரிக்கச் சமூகப் பொருளாதார முன்னேற்றத்தின் முக்கிய ஊற்றுகளில் ஒன்ருன தொழில் துறைப் பொறியியலுடன் நேரடியாகத் தொடர்பு கொள்ளும் இளைஞர்கள் தாம் இந்த முக்கிய சந்திப்பில் நேரடியாகப் பங்கு பெறுபவர்களாகின்றனர் என்றும் டாக்டர் பிராங்க்ளின் வலியுறுத்தினுர். மாற்றக்கூடிய பல உறுப்புக்கள் உள்ள கோல்ட் சுழல் துப்பாக்கி உருவான கதையை 19 வது நூற்ருண்டில் ஏற்பட்ட பல தொழில் துறை முன்னேற்றங்களுக்கு எடுத்துக்காட்டாக அவர் எடுத்துரைத்தார்.

அமெரிக்காவின் சுதந்திர தொழில் முயற்சியிலே இத்

( 7-ம் பக்கம் பார்க்க )

# புதிய ஆப்பிரிக்கா நாடுகளும் வருங்கால அரசியலும்

ஆப்பிரிக்காவிலேயே முதல் முதலில் ஓர் தேசீய அந்தஸ்து பெற்ற நாடு கானுவாகும். இத்தகைய அந்தஸ்து பெற்ற இந்நாடு இயங்கத் தொடங்கிய பொழுது இதன் வளர்ச்சியை நம்பிக்கையுடனும், ஆவலுடனும், உலகம் கூர்ந்து கவனித்து வந்தது. ஆனால் பத்து ஆண்டுகள் பூர்த்தியடைவதற்கு முன்பே இதன் போக்கு ஓர் கலவரத்தை உண்டாக்கி விட்டது. நாட்டில் ஒரே கட்சி இயங்குவதற்குப் பொதுமக்களின் வாக்குகளைக் கொண்டு நிர்ணயிக்க எடுத்த வாக்கெடுப்பு நடவடிக்கையைப் பற்றி அறிந்தவர்கள் நிர்வாகத்தின் நேர்மையற்ற தன்மையை அறியாமல் இருந்திருக்க முடியாது.

நாட்டில் ஒரே கட்சி இயக்கம் தலையெடுத்தால் ஜனுதிபதி என்குருமாவிற்கு நீதிபரிபாலன நிர்வாகத்தில் வரம்பு கடந்த அளவுக்கு அதிகாரம் கையாள வாய்ப்பு ஏற்பட்டு விடுகிறது. வாக்காளர்களுக்கு நேர்முகமாகக் காட்டிய பயமுறுத்தலும், வாக்கெடுப்பு முடிவை வெற்றிகரமாக்க எடுத்துக் கொண்ட ஒழுங்கீனமான வழிகளும் இந்நாட்டின் மீது பிற நாடுகள் கொண்டிருந்த கௌரவத்தை பெருத்த அளவுக்கு பாதித்துள்ளது.

இச்சிறிய கால அளவிற்குள் இத்தகைய மாறுதல்கள் இந்நாட்டில் உருவெடுத்ததற்குக் காரணம என்ன என்று ஓர் கேள்வி பிறக்கிறது. இதற்குக் காரணம் நாட்டு ஜனுதிபதி என்குருமாவே என்று இந்நாட்டு அரசியல் நிலையை அறிந்தவர்கள் கூறுகிருர்கள். இவருக்கு ஜனநாயகத்தில் மிகுந்த பற்றுதல் இல்லை என்றும், தான் உச்ச நிலையை அடைவதற்கு வேண்டிய அளவுக்குச் சூழ்நிலையை இவர் தாமே அமைத்துக் கொள்வது கண்கூடு என்றும், இத்தகைய நிலையை அடைவதற்குச் செல்லும் பாதையில் தலை தாக்கும் முரண்பாடுகள் யாவற்றையும் களைய இவர் பின்வாங்க மாட்டார் என்றும் சொல்லப்படுகிறது.

துர் அதிர்ஷ்ட வசமாக இவர் கையாண்ட முறைகளைப் புதிதாக உருவான இதர ஆப்பிரிக்கா நாடுகள் பின்பற்றும் மனப்பான்மை கொண்டுள்ளதால் இவர் இப்பொழுது கையாளும் பிற்போக்கு முறைகளையும் அவர்கள மாதிரியாக எடுத்துக்கொள்ளக் கூடாது. என்பது வெட்ட வெளிச்சம். இதர ஆப்பிரிக்கா நாடுகளின் அரசியல் தலைவர்கள் திறமையிலும், மனோபாவத்திலும், என்குருமாவுக்கு மாறுபட்டவர்களாக இருந்த போதிலும் என்குருமா போன வழியை அவர்கள் பின்பற்ருமல் இல்லையென்பதும் அறிந்த விஷயம். கால அளவில் ஆப்பிரிக்கா முழுவதிலும் இத்தொத்து நோய் பரவும என்பதும் மறைக்க முடியாத ஓர் உண்மை.

புதிதாக உருவான ஆப்பிரிக்கா நாடுகள் அவைகள் சுதந்திரம் பெற்ற காலத்திலிருந்தே பல இடற்பாடுகளை எதிர்நோக்கி நிற்கின்றன. உதாரணமாகப் பல, பல கூட்டங்களாக இயங்கி வந்த சில நாடுகளில் அக்கூட்டங்களிடையே பரஸ்பர ஒற்றுமையும், இணைப்பும் ஏற்படுவதற்கு முன்பே அவைகள் ஒன்றுபட்ட ஓர் தேசீய அந்தஸ்தைப் பெற்று விட்டன.

பல காலமாக இக்கூட்டங்களிடையே வளர்ந்து வந்த காய்ச்சலும், விரோத மனப்பான்மையும் இத்தகைய இணைப்புக்கு முரண்பாடாக விளங்கின. இக்கூட்டங்கள் யாவற்றையும் ஒன்ருகப் பிணைத்து அவர்களிடையே நட்பு மனப்பான்மை வளர்வதற்கு ஓர் மத்திய அரசு இன்றியமையாததாகும். பின்னர், பாராளு மன்றத்தில் எதிர்கட்சி ஒன்று அமைக்கப்பட்டால் அவ்வகைக் கட்சியில் வெவ்வேறு கூட்டத்தினர்களின் பிரதிநிதிகள் இடம் பெறுவார்கள். அவர்களிடையே தொன்று தொட்டு வரும் பகைமையும் இடம் பெறும். இதன் காரணத்தால் எதிர் கட்சியினுள்ளேயே நிரந்தரமாகப் பிரிவினை சக்தி குடிகொண்டிருக்கும். நாட்டு அரசியலில் எதிர் கட்சி ஒன்று இயங்காவிடில், பேச்சு உரிமை, பத்திரிகைகளின் உரிமை முதலியன பாதிக்கப்படும். இத்தகைய பின்னணியைக் கொண்டு இந்நாட்டு அரசியலைக் கூர்ந்து கவனித்தால் ஒரே கட்சியின் இயக்கம் இங்கு அத்தியாவசியம் எனபது நன்கு புலப்படும்.

ஆப்பிரிக்கா நாடுகளில் தேசீய உணர்ச்சி தலையெடுத்ததும் பிரிட்டிஷ் அரசியல் அமைப்பை ஒரு மாறுதலுமில்லாமலும், இந்நாடுகளுக்கு அது பொருந்துமா, பொருந்தாதா என்ற பிரச்சனையைப் பற்றி ஆலோசியாமலும், அதைப் புகுத்துவது விவேகமற்ற செயல் என்று ஒரு தரத்தார்கள் எண்ணங் கொண்டுள்ளார்கள். அதற்கு பதிலாக ஒரு ஜனுதிபதியின் கீழ் சட்ட சபைக்கும் நிர்வாகத் தலைவர்களுக்கும் இடையே ஓர் நல்லுறவை வளர்த்து, நாட்டு நலனைப் பேணி இயங்க வைப்பதுதான் சரியான முறை என்று அவர்கள் கூறுகிருர்கள். இது புதிய ஆப்பிரிக்காவின் தேசீய உணர்ச்சியின் வெளிப்படைச் சின்னம்.

நாட்டின் ஒரே கட்சியின் ஆதிக்கம் இடம் பெற்ருல் நிர்வாகத்தின் குற்றங் குறைகளுக்குத் தோன்றும் எதிர்ப்பு மறைவில் உருவாகி நாளடைவில் அது ஓர் எரி மலை போல் வெடிக்கும் சக்தியைப் பெற்று விடும். இதன் விளைவால், நாட்டில் அமைதி நிலை கெட்டுக் கொடுங்கோல் ஆட்சிக்கு அத்தகைய நிலை இடங் கொடுக்கும். புதிய ஆப்பிரிக்கா நாடுகளில் இம் மாதிரியான அரசியல் நிலை உருவெடுக்காமலிருப்பதற்கு வழி தேடுவது பிற்காலத்தில் இந்நாடுகளில் ஜனநாயகம் நிரந்தரமாக இடம் பெறுவதற்கு அடிகோலும். சுருங்கச் சொல்லின், இந்நாட்டைக் காப்பாற்றுபவர்கள் இந்நாட்டு மக்களே. ஐக்கியத்தின் பெயராலும், பொருளாதார முன்னேற்றத்தின் பெயராலும் நிர்வாகம் கையாளும் நேர்மையற்ற வழிகளை ஆதரிப்பவர்கள் நாட்டு மக்களின் வெறுப்புக்கு இலக்காவார்கள்.

பிற நாட்டினர்களைப் போல, ஜனநாயக தத்துவத்தில் நம்பிக்கை கொண்ட ஆப்பிரிக்கர்களுக்கும், அவர்களுடைய மனத்தின் கண் எழும் கருத்துக்களை எடுத்துக் கூற உரிமையுண்டு. அதே போல் அவர்களுடைய மனித கௌரவத்திற்கும் பிற நாட்டினர்களைப் போல மதிப்புண்டு. பல காலமாகப் போராடி அவர்கள் கைப்பற்றிய சுதந்திரம் அவர்கள் முன்னேறும் பாதையில் ஓர் மைல் கல் போலாகும். நெடுஞ்சாலையில் அவர்கள் மேலும் முன்னேறுவதுதான் அவர்கள் அரசியலில் இது காறும் ஈடுபட்ட போரின் வெற்றிக்கு அறிகுறி என்று அரசியல் அறிஞர்கள் அழுத்தமாகக் கூறுகிருர்கள்.

★



*பஞ்சாயத்து ஆட்சி முறை ஏற்பாட்டின் அடிப்படைப் பிரிவுகளாக, இன்று இரண்டு லட்சத்துக்கும் அதிகமான பஞ்சாயத்துக்கள் இந்தியாவில் இயங்கி வருகின்றன. மக்களின் தீவிர ஒத்துழைப்புடன் கிராமங்களில் சகல துறைகளிலுமாக அபிவிருத்திக்கு வகை செய்யும் ஏற்பாட்டை அமுல் நடத்துவதற்கு வேண்டிய அதிகாரங்களும், ஆதாரவசதிகளும் அவற்றுக்கு அளிக்கப் பட்டிருக்கின்றன.*

*கிராமங்களில் சகல விதமான க்ஷேமநல நடவடிக்கைகளுக்கும் பஞ்சாயத்துக்கள் ஊக்கமளித்து வருகின்றன. அஸ்ஸாம் ராஜ்யத்தைச் சேர்ந்த கிராமமொன்றில் மஹிளா மண்டலியொன்றில் பச்சிளங் குழந்தைகள் எழுதுவதில் ஈடுபட்டிருப்பதைப் படத்தில் காணலாம்.*

★




ஒன்றிய கொள்கையும் ஒன்றே கணந்தோறும்
தோன்றும் கடமைகள் ஆற்றுதல் நன்றே

ஒல 29 | 23—2—1964 | வாரம் 15

# நவீன பரசுராமர்

★

காங்கிரஸின் மீது ராஜாஜிக்கு ஏற்பட்டுள்ள கோபம் அவரது கண்களை மறைக்கும் அளவுக்கு வளர்ந்திருப்பதாகத் தெரிகிறது. இருபத்தோரு தலைமுறைக்கு அரச குலத்தைக் கருவறுப்பதாகச் சபதம் செய்த பரசுராமருடைய கோபம் போல் அவ்வளவு கண்மூடித்தனமாகவும் இருக்கிறது.

காங்கிரஸை ஒரு பிசாசாகவும், ராட்சதனாகவும் உவமித்துக் கூறிய பிறகும் அவருடைய ஆவேசம் அடங்கவில்லை. வாக்குச் சீட்டுள்ள பெட்டிகளையே அவர்கள் மாற்றி விடுவார்களோ என்றும் தாம் அஞ்சுவதாக அவர் சென்னை தேர்தல் பிரசாரக் கூட்டம் ஒன்றில் கூறியிருப்பதைப் பார்த்தால் வியப்பாக இருக்கிறது.

வாக்குப் பெட்டிகள் அரசாங்க உத்தியோகஸ்தர்கள் பொறுப்பில் போலீஸ் பாதுகாப்பில் இருந்து வருபவை. காங்கிரஸ்காரர்களின் செல்வாக்கினால் அந்தப் பெட்டிகளை உடைத்து ஏதாவது செய்து விடுவார்கள் என்று கூறுவது, சாதாரணமான பாமரர்கள் பேசுகிற பேச்சேயல்லாமல், இப்படிப் பேச ஒரு ராஜாஜி போன்ற அறிவாளி வேண்டியதில்லை.

அவருடைய அளவுக்கு மீறிய அறிவுதான் இன்று நம்முடைய நாட்டின் அடிப்படையான தொல்லைகளுக்கெல்லாம் காரணம் என்பதை பழைய வரலாற்றை எண்ணிப்பார்த்தால் தெளிவாகப் புரிந்து கொள்ளலாம். பாகிஸ்தான் என்பது வெறும் சொல்லாக மட்டுமே இருந்தது. மகமதலி ஜின்னாவே பாகிஸ்தான் கிடைக்கும் என்று நம்பவில்லை. ஏதோ குருட்டாம் போக்கில் அப்படி ஒரு விவகாரத்தை அவர் கிளப்பினார். ஆங்கில ஆட்சியாளர்கள் அதற்குத் தூபம் போட்டார்கள். கடைசியில் பாகிஸ்தான் பிரித்துக் கொடுத்து விட வேண்டியது தான் என்று காங்கிரஸிலிருந்து கொண்டே பகிரங்கமாகப் பிரசாரம் செய்து பாகிஸ்தான் உருப்பெறுவதற்கான ஒரு தர்மச் சங்கடச் சூழ்நிலையை உண்டாக்கியவர் ராஜாஜி என்பதை இந்த நாடு மறந்துவிட முடியாது.

அதன் விளைவாக எதிர்பாராத வகுப்புக்கலவரங்களும் மக்கள் குடிபெயர்தலும், அகதிப் பிரச்னையும், அத்தனைக்கும் பிறகு அண்ணல் காந்தியடிகளும் கோர மரணமும் ஏற்பட்டு விட்டன. பாகிஸ்தான் என்ற பூதத்துக்கு உயிர் கொடுத்த அதே மகா புருஷர்தான் காஷ்மீர் பிரச்னையும் இதன் விளைவுதான். ஆயினும் இப்பொழுது முஸ்லீம் லீகோடு குலாவுகிறார். அவருடைய அளவற்ற அறிவுத் திறத்தின் லாபங்கள் இவையெல்லாம்.

இப்பொழுது ஓட்டுப் பெட்டிகளை மாற்றி விடவும் கூடும் என்று அவர் கூறுவது, அரசாங்க உத்யோகஸ்தர்கள் அத்தனை பேரும் அயோக்கியர்கள் ' என்று கூறாமற் கூறுவது ஆகும். அரசாங்க உத்யோகஸ்தர்களை எப்போதும் தூக்கி வைத்துப் பேசிவந்தவர் இவர். இன்று அவர் பதவியில் இல்லாதபடியால் அத்தனைபேரும் அயோக்கியர்களாகி விட்டார்கள் போலும்.

எப்படியோ, தமிழ் நாட்டுப் பிராமண சமூகம் சிந்திக்கும் சக்தியை முற்றிலும் இழந்து விட வில்லை என்று நம்புகிறோம். 'பெருங்காய மிகுந்த பாண்டம்தான்; கூடிய விரைவில் அந்த நாற்றம் போய்விடும். அதுவரையில் மூக்கைப் பிடித்துக்கொண்டாவது தி.மு.க.வை ஆதரியுங்கள்' என்று பிராமணர்களுக்கு வேண்டுகோள் விடுக்கும் அளவுக்கு அவருடைய வாதத் திறமை மேலோங்கியிருக்கிறது.

பிராமண சமூகம் எந்த அளவுக்கு இதையெல்லாம் ரசிக்கிறது என்பது தெரியவில்லை. தேர்தல் விளைவுகளில் காங்கிரஸ் மிகுந்த பலம் பெற்று வருகிறது. அந்தணர்கள் ஆதரவு இல்லையென்ற நிலையிலும் காங்கிரஸ் பலம் ஒன்றும் குறைந்துவிடவில்லை. ஒன்று மட்டும் நிச்சயம். காங்கிரஸ் ஒரு நாளும் அழியாது. எத்தனை ராஜாஜிக்கள் வந்தாலும் அது நடவாது. காங்கிரசுக்கு விரோதமாகத் தீர்ப்பளித்து ஜனநாயகத்தை வேண்டுமானால் அழிக்கலாம். பிராமண சமூகம் நன்றாகச் சிந்திக்க வேண்டும். அறிவு வேண்டும் அதைவிட இதயம்தான் நமக்குப் பெரிதும் வேண்டும்.

★

# கண்ணோட்டம்

— ரா. நா.

முன்னாள் கவர்னர் ஜெனரலும்; தற்போதைய சுதந்திரா கட்சியின் ஸ்தாபகராகவும் உள்ள உயர்திரு. ராஜகோபாலாசாரியார் கேவலம் முனிசிபல் தேர்தல்களில் இறங்கி புயல் வேக பிரசாரம் செய்து வருகிறார். ராமாயணம், மகாபாரதம் முதலிய புராணங்களுக்கும் விளக்கம் கூறியவர், சாக்கடை சுத்தம் செய்யும் பொறுப்பை வகிக்கும் ஸ்தல ஸ்தாபன தேர்தல்களில் கலந்து கொண்டு குட்டையைக் குழப்புகிறார். தாம் நீர் ஊற்றி வளர்த்த காங்கிரஸை அழிக்கும் வரையில் உயிருடன் இருக்க ஆசைப்படுகிறார்.

சென்னையில் தி. மு. க.வை ஆதரிக்கிறார். அண்ணாத்துரையை சிறையில் வைத்து விட்டு தேர்தல் நடத்தலாமா என்று கேட்கிறார். அண்ணாத்துரையை காரணமின்றிச் சிறையில் வைக்கவில்லை. ஆசாரியாரின் ஆட்சியில் ஹிந்தியைக் கட்டாயப் படுத்தி அதை எதிர்த்தவர்களைச் சிறையில் வைத்தார். தற்போதைய காங்கிரஸ் ஆட்சி ஆட்சியின் அடிப்படையான அரசியலமைப்பை எரிக்க முன்வந்ததற்காக தி. மு. க. தலைவர்களைக் கைது செய்துள்ளனர். இவர்கள் சட்ட எரிப்பை மேற்கொள்வதற்கு முன்பே ஸ்தல ஸ்தாபன தேர்தல்களுக்கு ஏற்பாடு செய்யப்பட்டு விட்டது. தி. மு. க. தலைவர்கள் தேர்தல் கோட்டையைப் பிடித்த பிறகு சட்ட மறுப்பை மேற்கொள்வதுதானே. மேலும் அண்ணாத்துரை வெளியே இருந்தால் தான் தேர்தலில் வெற்றிபெற முடியுமா? வெளியே இருக்கும் கருணாநிதி போன்றவர்கள் தங்கள் தலைவர் 'அண்ணா' சிறையிலிருப்பதைச் சுட்டிக் காட்டி ஓட்டு வேட்டையாடுகிறார்கள். 'அண்ணா'வின் உருவப்படத்தைச் சுவரொட்டிகளில் பிரசுரித்து விளம்பரம் செய்திருக்கின்றனர். ஆகையால் அண்ணாத்துரை சிறையிலிருப்பதைப் பிரசாரப்படுத்தி மக்கள் மனதைக் கலக்கும் ஆசாரியாரின் முயற்சி பலிக்காது. ஓட்டுரிமையுள்ள மக்களுக்கு தேர்தலில் போட்டியிடும் கட்சிகளின் தராதரம் நன்கு தெரியும். காங்கிரஸ் ஆட்சியினால் பாமர மக்களுக்குக் கிடைத்துள்ள நன்மைகளையும், அவர்களது நல்வாழ்விற்கு காங்கிரஸ் வகுத்துள்ள திட்டங்களையும் அவர்கள் நன்கறிவர். அகட விகட சாமர்த்தியத்தால் அவர்களை ஏமாற்ற முடியாது என்பதை திரு. ஆச்சாரியார் உணர வேண்டும்.

ஃ ஃ

ஐ. நா. பாதுகாப்பு சபையில் காஷ்மீர் விவகாரத்தில் பிரிட்டனும் அமெரிக்காவும் செய்த துரோகம் மன்னிக்க முடியாதது. பிரிட்டன் இந்தியாவிற்கு சுதந்திரம் வழங்குகையில், இந்நாட்டிலுள்ள சமஸ்தானாதிபதிகள் தங்கள் சமஸ்தானங்களை தங்கள் இஷ்டப்படி நிர்வகிக்கலாம் என முடிவு செய்தனர். அந்த முடிவின்படி சமஸ்தானங்கள் சுதந்திரமாகவும் இருக்கலாம். சுதந்திர சாஸனத்தில் சுதேச மன்னர்கள் தங்கள் மக்களைக் கலந்துகொண்டு தான் தத்தம் நாட்டின் எதிர்காலத்தை நிர்ணயிக்க வேண்டும் என்று கூறவில்லை. அப்படியிருக்க இன்று காஷ்மீர் மக்களின் சுயநிர்ணய உரிமை பற்றிப் பேசுவானேன். தவிர, ஐ. நா. தீர்மானத்தின் படி பாகிஸ்தான் ஆக்கிரமித்த இடத்தை விட்டு வெளியேறின பின்பு தான் மக்கள் கருத்தை அறிய வேண்டும்.

பாகிஸ்தான் அக்கிரமம் செய்து விட்டு அந்த அக்ரமத்தின் நற்பயனை அனுபவிக்க வேண்டும் என்று கூறுவது எப்படி நியாயமாகும்? ஐ. நா. காஷ்மீர்பற்றி தீர்மானம் செய்த பின்பு இந்தியாவுடன் இணைந்த காஷ்மீர் பகுதியில் மும்முறை பொதுத்தேர்தல் நடந்து அங்கு ஜனநாயக ஆட்சி நடந்து கொண்டிருக்கிறது. பாகிஸ்தான் ஆக்ரமித்த பகுதியில் ஜனநாயக முறையில் தேர்தல் நடந்ததா? ஜனநாயக மரபு பற்றிப் பேசும் பாகிஸ்தானில் தான் வயது வந்தவர்களுக்கு வாக்குரிமை அளித்து சுதந்திரமான தேர்தல் நடந்திருக்கிறதா? இல்லவே இல்லை. இந்த நிலையில் பிரிட்டனும், அமெரிக்காவும் பாகிஸ்தானுக்கு ஒத்து ஊதுவது எப்படி நியாயமாகும்? காஷ்மீர் விஷயத்தில் இவ்விரு நாடுகளும் கடைபிடிக்கும் வழிகள் மூலம் ஜனநாயக உலகத்தின் மதிப்பை இழப்பது நிச்சயம்?

ஃ ஃ

கேரள ராஜ்யத்தில் இன்னமும் சாகோ விவகாரம் தீரவில்லை. சாகோவிடமுள்ள உள்நாட்டிலாகா பொறுப்பை எடுத்து விட்டு மந்திரி சபை நீடிக்க வேண்டும் என மத்ய பார்லிமெண்டரி போர்டு தீர்ப்பளித்தது. இது சம்புந்தமாக டில்லி சென்று வந்த திரு. சாகோ பத்திரிகைகளுக்கு ஒரு அறிக்கை வெளியிட்டார். இதன் மூலம், தம்மைப் பற்றிய விவகாரம் தொடங்கியதும் தாம் பதவியிலிருந்து விலகி விடுவதாக முதலமைச்சரிடம் கூறியதாகவும், அவர் "இச்சிறு" விஷயத்துக்காக பதவித் துறப்புச் செய்ய வேண்டியதில்லை எனக் கூறியதாகவும் தெரிவித்தார். இந்த அறிக்கை வெளிவந்ததன் விளைவாக நிலைமை சிக்கலடைந்து விட்டது. திரு. சாகோ மந்திரி சபையை விட்டு விலக வேண்டும் என்கிற கட்சி வலுவடைந்து வருவதாகக் கூறப்படுகிறது. திரு. சாகோவும் பதவி துறப்பதற்குத் தயாராயிருப்பதாகத்தெரிகிறது. சாகோ இருப்பதா விலகுவதா என்பதைவிட மந்திரிசபை பலஹீனமடையாமல் நீடிக்க வேண்டும் என்பது தான் முக்கியம்.

## ஆசிரியருக்குக் கடிதம்

பாரத நாட்டுப் பத்திரிகைகளில் ''ஆசிரியருக்குக் கடிதம்'' என்பது ஒரு நிரந்தர அம்சமாகும். பொதுமக்களுக்கு இருக்கும் ஏதாவதொரு அசௌகரியத்தையோ, கஷ்டத்தையோ, அபாயத்தையோ பற்றிப் புகார் தெரிவித்துப் பல கடிதங்கள் இந்தப் பகுதியில் வெளியாகின்றன. ஆனால் இந்தக் கடிதங்களில் அடங்கியுள்ள புகார்களை அதிகாரிகள் எப்போதும் கவனித்து உரிய நடவடிக்கை எடுக்கிறார்களா? கிடையவே கிடையாது. ஆனால் மேற்கு ஜெர்மன் போன்ற முற்போக்கு நாடுகளில் இந்த மாதிரி ஒரு கடிதம் வந்தால் கூட அதிகாரிகளிடையே போதிய விருவிருப்பையும், பரபரப்பையும் காணலாம்.

மேற்கு ஜெர்மனியின் ஹானோவர் நகரத்துக்கருகில் உள்ள மிஸ்பர்க என்னும் ஊரில் வசிப்பவர் ஒருவர், போன கோடையில் உள்ளூர்ப் பத்திரிகைக்கு ஒரு கடிதம் எழுதினார். அந்த ஊரிலுள்ள சிமெண்ட் ஆலையிலிருந்து கிளம்பும் வெண் தூசி எவருக்கும் தாங்கமுடியாத தொல்லையாயிருக்கறது என்று அவர் வன்மையாகப் புகார் செய்திருந்தார். கடிதம் வெளியாகி ஒரு நாள் கூட ஆகவில்லை; ஆலையின் டைரக்டர், தாம் இந்தத் தொல்லையை ஒழிப்பதற்கு ஏதாவது செய்வதாக உறுதி கூறி அந்தப் பத்திரிகைக்கு ஒரு பதில் எழுதினார். அது மட்டுயல்ல; இலையுதிர் காலத்தின் துவக்கத்தில் இருபது நிபுணர்கள் ஒன்று கூடி இந்தப் பிரச்னையை ஆராய்ந்தார்கள். முதலில் புகார் செய்து கடிதம் எழுதியவரும் இதில் கலந்து கொண்டார். புகழ்மிக்க ஸ்விஸ் கம்பெனி ஒன்றின் தலைவரும், டைரக்டரும் கூட உடன் இருந்தார்கள். வெண் தூசிப் படலம் கிளம்புவதை நிறுத்துவதற்கு என்ன செய்வார் என்று அவர்களிருவரும் யோசனை சொன்னார்கள். அவர்களுடைய யோசனையின் பேரில், ஸிமெண்ட் ஆலையின் களவாய்களில் மின்சார வடிகட்டி ஒன்றை, பன்னிரண்டு லட்சம் ரூபாயில் செலவில் அமைத்தார்கள். இன்னொன்று அமைக்கவும் யோசனை இருக்கிறது.

★

தமிழ், ஆங்கில
காந்தீய
சர்வோதய
பூமிதான
கிராமதான
இலக்கியம்
பத்திரிகை
ஆகியவற்றிற்கு

சர்வோதயப்
பிரசுராலயம்
தஞ்சாவூர்.

# கவி கார்ப்பெண்டர்

— பி. கோதண்டராமன்

கவி எட்வர்டு கார்ப்பெண்டர் (1844-1929) சமூக சீர்திருத்தக்காரராயும் லட்சியவாதியாயும் விளங்கினுர். கவி விட்மனின் எழுத்துக்கள் அவர்மீது பெருஞ் செல்வாக்கு செலுத்தின. பாட்டாளியின் எளியவாழ்க்கையை வாழ முயன்றுவந்தார். அவர் தம்நூல்களில் அறநெறி, அழகு, மானிடம் பற்றிய கருத்துக்களை ஆர்வமுடன் வெளியிட்டார்.

அவர் இங்கிலாந்தில் பிரைட்டனில் வழக்கறிஞர் ஒருவரின் மகனுகப் பிறந்தார். பிரைட்டனில் பள்ளிப் படிப்பை முடித்துக் கொண்டு கேம்பிரிட்ஜில் கலாசாலையில் சேர்ந்து 1868-ல் கணிதப் பரிட்சையில் முதல்தரமாகத் தேர்ந்தார். பின் திருச்சபை மடத்துறையில் சேர்ந்து குரு மோரீசின் துணையாளராக வேலைபார்த்தார். சிறிது காலத்திற்குள் அதைத் துறந்து சர்வகலாசாலையில் வானசாத்திர விரிவுரையாளராஞர். 1883-ல் மில்தார்ப் என்னுமிடத்தில் குடிசையொன்றில் குடியேறி வயலில் உழுது தமக்குத் தேவையான காய்கறிகளையும் பழங்களையும் பயிரிட்டார் அவர் அப்போது எழுதிய கவிதைகளில் 'நார்ஸிஸ்ஸஸ்' 'ஜனநாயகத்தின் வழியே' என்பன புகழ்பெற்றன. உரைநடை நூல்களில், நாகரிகம், பருவமடையும் காதல், படைப்புக்கலை, என் கனவுகள் என்பன சிறப்புடையன. இலங்கையிலும் இந்தியாவிலும் பிரயாணம் செய்த அவர் "ஆதாம்சிகரம் முதல் எலிஃபாந்தாவரை" என்னும் நூலை 1882-ல் எழுதினுர். இந்நூலில் அவர் கீழ்நாடுகளில் காணும் அமைதியைப் பாராட்டியுள்ளார். அவர் வாழ்க்கை முழுதும் விக்டோரியா காலத்தில் மரபொழுக்கங்கள், போலிமரியாதைகள் ஆகியவற்றின் எதிர்ப்பாகவே இருந்தது.

கார்பெண்டருக்கு உயர் கவிதைத் திறன இருந்தது. விட்மனைப் போல அவரும் ஜனநாயக தீர்க்கதரிசியாக விளங்கினுர். விட்மனைப் போலன்றி அவர் ஓரளவு ஆத்மஞானியாகவும் விளங்கினுர். கவி அல்லது கலைஞனின் அம்சத்தைவிடத் தீர்க்க தரிசன, சிந்தனை அம்சங்களே அவரிடம் ஆதிகமாகக் காணப்பட்டன விட்மனிடம் காணப்பட்ட காவியக் குரல் இவரிடம் இல்லை. ஆயினும் இவரிடம் ஒருவித இணக்கமும், தெளிவும் சிந்தனை நிறைவும் இருந்தன. இவரிடம் கவிதையார்வத்தால் வரும் கவிதைச் சந்தமோ, இசையோ, தீவிரமோ, மொழியாற்றலோ இல்லை.

வாழ்க்கை அளிப்பதைவிட விழுமிய அழகையும் நிலையான நிறைவையும் அடையவே கலை நாடுகின்றது. கவிதை தன் அருளாவேசத்தில் தன் இறகுகளை அடித்து உயரப் பறக்கின்றது. இத்தகைய நாட்டமும் உயரப் பறக்கும் பேறும் கார்ப்பெண்டரிடம் இல்லை. ஆற்றல் வாய்ந்த கவிதையுருவம், கவிதைக்குரிய ஒலி நயமும் இசையும் இவரிடம் இல்லை. ஆனுல் இவரிடம் பொருளின் ஆற்றலும் சிந்தனை வழியும் இருந்தன. புதுயுகத்திற்குரிய புதிய தீவிர கவிதையானது ஒலி நயத்தைக் கொண்டே ஆற்றலுடன் வெளிப்பாடு அடைய முடியும். கார்ப்பெண்டர் புது யுகத்தின் ஒரு முன்னேடியே.

★

# கூட்டுறவு இயக்கம் துரிதப்படுத்தப்படும்

திட்டமிடுவதிலும், கூட்டுறவு இயக்கத்தை அபிவிருத்தி செய்வதிலும், தேசீய கூட்டுறவு அபிவிருத்திக் கார்ப்பொரேஷன் மேற்கொள்ள விருக்கும் புதிய பொறுப்புகளை யூனியன் சமுதாயநல அபிவிருத்தி கூட்டுறவு மந்தராலயம் விளக்கியிருக்கிறது.

கொள்கைகளையும் திட்டங்களையும் வகுக்கும் பொறுப்பு முழுவதும் இம்மந்திராலயத்தின கூட்டுறவு இலாகாவைச் சேர்ந்ததாக இருக்கும்; திட்டங்களை நிறைவேற்றிவைக்கும் ஒரு ஸ்தாபனமாக இக்கார்ப்பொரேஷன் இயங்கி வரும்.

திட்ட அமுலுக்குப் பிறகு தொடர்ந்து மேற்கொள்ளப்படவேண்டிய நடவடிக்கைகள் விஷயத்தில் இக்கார்ப்பொரேஷன் அதிக அளவில் பொறுப்பேற்கும்; இந்நடவடிக்கைகளில் பின்வரும் அம்சங்கள் அடங்கியிருக்கும்:

(1) கூட்டுறவுத் துறையில் ஏற்படும் பிரச்னைகளுடன் திறமையான முறையில் தொடர்பு வைத்துக்கொள்வது; (2) ராஜ்ய சர்க்கார்களுடனும், ராஜ்யக் கூட்டுறவு அமைப்புகளுடனும், திறமையான வகையில் தொடர்பு வைத்து வருவது; (3) ஏற்பட்டுள்ள முன்னேற்றம பற்றி அவ்வப்போது பரிசீலனை செய்வது; (4) கள ஆராய்ச்சி, தொடர்புகள் ஆகியவற்றின் அடிப்படையில் போதுமான தகவல்கள் கிடைக்கும்படிச் செய்வது; புதிய கொள்கைகளையும திட்டங்களையும் உருவாக்குவதிலும் ஏற்கெனவே உள்ளவற்றைத் திருத்தியமைப்பதிலும் இத்தகவல்கள் இம்மந்திராலயத்துக்கு உதவியாக இருந்துவரும்.

ஸ்தாபன அமைப்பு ஏற்பாடுகள் சம்பந்தப்பட்ட வரையில், இக்கார்ப்பொரேஷன் மூன்று அலுவல் பிரிவுகளாகப் பிரிந்து இயங்கிவரும்; அதாவது முதல் பிரிவு கடன் வசதியையும், இரண்டாவது பிரிவு, விற்பனை-பொருள் பக்குவ ஏற்பாடுகளையும், மூன்ருவது பிரிவு, உபயோகிப்போர் கூட்டுறவுக் கடைகளையும் கவனித்துக் கொள்ளும். இக்கார்ப்பொரேஷனில் நான்கு துணை டைரெக்டர்கள் இருப்பார்கள்; இவர்களில் ஒருவர் கடன் வசதிப் பிரிவுக்கும், இரண்டுபேர் விற்பனை-பொருள் பக்குவப் பிரிவுக்கும், நான்காவது நபர் உபயோகிப்போர் கூட்டுறவுக் கடைகளுக்கும் பொறுப்பு வகித்து வருவார்கள். இவர்களைத் தவிர, மேலும் துணை டைரெக்டர்கள் தாற்காலிகமாக நியமிக்கப்படுவார்கள்; கிழக்கு ராஜ்யங்களில் விற்பனை கூட்டுறவு சங்கங்கள் மூலம், சணலைக் கொள்முதல் செய்யும் நடவடிக்கைகளை இவர்கள் கவனித்துக் கொள்வார்கள்.

இந்த மூன்று பிரிவுகளின் பொறுப்புகளை ஏற்றிருக்கும் டைரெக்டர் அல்லது உதவிக் காரியதரிசி மட்டத்தில் உள்ள மந்திராலய அதிகாரிகள் இக்கார்ப்பரேஷன், இம்மந்திராலயம் ஆகிய இரண்டிற்குமே பணியாற்றுவார்கள்.

இக்கார்ப்பரேஷன் அலுவலகத்தின் முழுப்பொறுப்பும் காரியதரிசியிடம் இருக்கும். நிர்வாகக் கமிட்டியின் தீர்மானங்கள் உடனடியாகவும் திறமையாகவும் நிறைவேற்றப்படுகின்றனவா என்பதை இக்கார்ப்பரேஷன் காரியதரிசி கவனித்துக் கொள்வார்.

★

## தொழில்நுட்பக் கழகம்

சென்னை, இந்தியத் தொழில் நுட்பக்கழகத்தைச் சேர்ந்த முன்னுள் உதவிப் பேராசிரியர் ஒருவரால் சமர்ப்பிக்கப்பட்ட ரூ. 1,03,800 மானிய மதிப்புள்ள ஆராய்ச்சிப் பிரேரணை ஒன்றுக்கு அமெரிக்க, தேசீய தர வரையறை பீரோ அங்கீகாரம் அளித்திருக்கிறது என்றும் அந்த உதவிப் பேராசிரியர் இப்போது இக் கழகத்தில் சேவையில் இல்லாததன் காரணத்தால் அந்த மானியம் பயன்படுத்திக் கொள்ளப்படவில்லை என்றும், யூனியன் கல்வித் துணை மந்திரி டாக்டர் எம். எம். தாஸ் சென்ற புதன்கிழமையன்று லோக் சபாவில் ஒரு கேள்விக்குப் பதிலளிக்கையில் தெரிவித்தார். இந்தியாவிலுள்ள பல்கலைக் கழகங்கள், கல்வி ஸ்தாபனங்கள் ஆகியவற்றில் பணியாற்றுகிற இந்தியப் பிரஜைகளின ஆராய்ச்சித் திட்டங்களுக்கான ஒரு திட்டத்தின் கீழ் இந்த மானியம் வழங்கபபட்டது. ●




நாட்டின் சுதந்திரத்திற்கு ஆபத்து ஏற்பட்டுள்ளது. முழு வலிமையுடன் அதைக் காருங்கள் —ஜவாஹர்லால் நேரு

பாதுகாப்பும் உங்கள் பணிதான்

முன்னணிப் பகுதியில் உள்ள ஜவானுக்கு போதுமான சாதனங்கள் அளிக்க, உள்நாட்டுப் பகுதியில் ஐம்பதிலிருந்து நூறு பேர்கள் வேலை செய்யவேண்டும். பாதுகாப்பின் அதிகரித்து வரும் தேவைகளை சமாளிக்க மேலும் மேலும் பொருள்களும், சாதனங்களும், தங்கு தடையின்றி செல்லவேண்டும்.

உங்கள் பணி இன்றியமையாதது. சலியாது உழைத்து தேசீய திறமையை உயர்த்துங்கள்.

கட்டுப்பாடான நடத்தையே நாட்டின் பலம்

DA-63-F/10


குடந்தை கோயில்
இந்தியாவின் சிகரஜோதி
COMPOUNDED ASAPOETIDA
L G
REGD. TRADE MARK.
கூட்டுப் பெருங்காயம்
உங்கள் நாவே நற்சான்று
லால்ஜி கோது & கோ. கும்பகோணம்


அமுத வாக்கு

எடுத்த காரியம் யாவினும் வெற்றி,
எங்கு நோக்கினும் வெற்றிமற் ருங்கே
விடுத்த வாய்மொழிக் கெங்கணும் வெற்றி,
வேண்டி னேனுக் கருளினள் காளி.

அசோகா பாக்கு
No. 1506 அசோகா MILD SCENTED ASOKA சீவல் நெ. 1506

சூட்டிங், ஷர்ட்டிங்ரகங்களும் எங்களிடம்
பார்க்கத்தகுந்தவை எல்லாவிதமான
ஜவுளிகளும் கிடைக்கும்
பி. ரா. நாராயணசாமி அய்யர்
ஜவுளி வியாபாரம்
பெரியகடை வீதி திருச்சிராப்பள்ளி. 8.
பிராஞ்சு: பான்ஸி ஹால் சைனுபஜார் திருச்சி.
மில் ஜவுளிகள் எங்களிடம் சில்லரை வியாபாரிகளுக்கு மொத்தமாக கிடைக்கும்.


சிவாஜி ஆண்டுக்கட்டணம் தனிநபர் ரூ 5 - நிறுவனங்கள் ரூ 10.

# அறுவடை மாதம்

உழுதவன் தனது வரவு செலவுக் கணக்கைப் பார்க்கும் காலம் அனேகமாக மாசி, பங்குனி மாதங்களேயாகும். மார்கழி பிற்பகுதியிலேயே சில இடங்களில் அறுவடை தொடங்கினலும் மாசி பங்குனி வரை பெரும்பாலான இடங்களில் அறுவடை நீடிக்கும். முன் கூட்டி அறுவடையான இடங்களில் விவசாயிகள் தங்கள் தேவைக்கு அதிகமாக உள்ள தானியங்களை இம்மாதம் விற்று முதலாக்குவார்கள்.

ஒரு சில இடங்களில் கோடை சிறு தானியப் பயிருக்கு நிலத்தைப் பண்படுத்தும் வேலை நடைபெறும். கரும்பு விவசாயம் செய்பவர்கள் பிப்ரவரி தொடங்கி மிக மும்முரமாகக் கரும்பு நடவில் ஈடுபட்டிருப்பார்கள். மாசி, பங்குனியில் பல இடங்களில் உகண்டா பருத்தி விதைப்பு நடைபெறும்.

கரும்புச் சாகுபடி செய்யும் விவசாயிகள் அரசாங்கம் அளிக்கும் பல உதவிகளையும் பயன்படுத்திக்கொண்டு உற்பத்தியைப் பெருக்க வேண்டிய அவசியத்தை 'இப்போது நினைவூட்டுவது பொருத்தமாகும். டிராக்டர்கள், இரும்புக் கலப்பைகள் முதலான கருவிகளை விவசாய இலாக்காவினர் சாகுபடியாளர்களுக்கு வாடகைக்குக் கொடுக்கிருர்கள். இரும்புக் கலப்பை, பார்க் கலப்பை முதலியவைகள் குறைந்த விலைக்கும் விற்கப்படுகின்றன. விவசாயியின் உழைப்பைக் குறைத்துத் தொழிலை சுலபமாக்குகின்ற இக்கருவிகளை வாடகைக்கோ, விலைக்கோ வாங்கிக் கொள்வதற்கு எல்லோரும் முன்வரவேண்டும். கரும்பு நாற்றங்கால் தயாரிக்கும் விவசாயிகளுக்கு உதவித் தொகையும் அரசாங்கத்தால் கொடுக்கப்படுகிறது. உரங்கள் வாங்குவதற்கும், கிணறு வெட்டுவதற்கும், கரும்பாலைப் பிராந்தியங்களில் சாலைகள் அமைத்துக் கொள்வதற்கும் கடனுதவிகள் செய்யப்படுகின்றன. மருந்து தெளிக்கும் கருவிகளும் வாடகைக்கு விடப்படுகின்றன. இவை தவிர அனுபவப்பட்ட சிறப்பு அலுவலர்களைக் கொண்டு தொழில் நுட்ப ஆலோசனைகளும் இலவசமாக வழங்கப்படுகின்றன.

இந்த உதவிகளையெல்லாம் விவசாயிகள் பயன்படுத்திக் கொண்டு கரும்பு உற்பத்தியைப் பெருக்கலாம்.

கரும்பு நடவின்போது பின்வருவனவற்றைக் கட்டாயம் நினைவில் வைத்துக் கொள்ள வேண்டும்.

* பொறுக்கு ரகங்களையே தெரிந்தெடுத்துப் பயிரிடுதல்.
* நோயால் தாக்கப்படாத கரும்பிலிருந்து கரணைகள் தயாரித்தல்.
* கரணைகளை அரிடான் மருந்தில் முக்கி எடுத்த பின் நடுதல்.
* நடவு நட்டு மூன்று—ஐந்து வாரத்திற்குள் சொட்டையான இடங்களைக்கண்டறிந்து புதிய கரணைகளை நடுதல்.
* அடர்த்தியாக நடப்பட்ட இடங்களிலிருந்து கரணைகளைப் பிரித்தெடுத்துக் குறைத்தல்.

ஆண்டுதோறும் விவசாயிகள் உழுது விதைத்துப் பயிர் செய்கிருர்கள். பின்னர் அறுவடை செய்து பயனடைகிருர்கள். ஆனல் ஒருமுறையாவது அறுவடைக்குப்பின் நிலத்து மண்ணில் என்னென்ன மாற்றங்கள் ஏற்பட்டிருக்கின்றன என்று நினைத்துப் பார்ப்பவர்கள் எத்தனை பேர்? ஒரு விவசாயி ஒரு ஏக்கர் நிலத்தில் நெல் சாகுபடி செய்து 200 ராத்தல் தானியமும் 4000 ராத்தல் வைக்கோலும் அறுவடை செய்ததாக வைத்துக் கொள்வோம். அப்படியாளுல் அந்த நிலத்து மண்ணிலிருந்து சுமார் 54 ராத்தல் தழைச்சத்தும், 22 ராத்தல் மணிச் சத்தும், 83 ராத்தல் சாம்பல்சத்தும் (பொட்டாஷ்) அகற்றப்பட்டிருக்கும்.

மற்ருெரு விவசாயி ஒரு ஏக்கர் நிலத்தில் 1500 ராத்தல் கடலையும், 4500 ராத்தல் கடலைச் செடியின் தழை கொம்புகளையும் அறுவடை செய்ததாக வைத்துக் கொள்வோம். அந்த மண்ணிலிருந்து சுமார் 65 ராத்தல் தழைச் சத்தும், 12 ராத்தல் மணிச்சத்தும், 38 ராத்தல் சாம்பல் சத்தும் அகற்றப்பட்டிருக்கும். இப்படி ஒவ்வொரு வகையான பயிரையும் விளைவிக்கும் போது வெவ்வேறு அளவு நிலச்சத்துக்கள் மண்ணிலிருந்து அகற்றப்படுகின்றன. இந்த வளக்குறைவை ஈடு செய்வதற்காக நாம் புதிது புதிதாக வயலில் உரங்களைக் கொட்ட வேண்டும். மண்ணில் இப்படி கார, அமில நிலைகள் பாதிக்கப்படும் போது உடனுக்குடன் உரங்களைச் சேர்த்து சரிசெய்து கொள்ளாவிடில் நாளடைவில் நிலம் சாகுபடிக்கே தகுதியற்றுப் போய்விடும். மண்ணின் தன்மையைக் கெடுக்கும் வேறு சில வெளிக் காரணங்களும் இருக்கின்றன. காற்றிஞலும், நீராலும் மண் அறிக்கப்படுதல், களைச் செடிகளை அப்புறப்படுத்தும் போது நிலத்தின் வளத்தோடு சிறிதளவு மண்ணும் வெளியேற்றப்படுதல், ஆகியவற்றை இவ்வகையில் குறிப்பிடலாம். அறுவடையானதும் மண்ணில் என்னென்ன குறை ஏற்பட்டுள்ளது என்று கண்டு அவற்றை விவசாயிகள் சீர்ப்படுத்துவது மிக முக்கியமாகும். வரப்புக்கள் உடைந்திருந்தால் அவற்றைத் திருத்தி அமைக்கவேண்டும்.

சம்பா நெல் அறுவடைக்குப் பிறகு தஞ்சாவூர், திருச்சி, வட ஆற்காடு மாவட்டங்களில் பாசன வசதி கிடைக்கும் இடங்களில் நஞ்சைத் தரிசில் பருத்தி பயிரிடுகிருர்கள். அதற்கு இம்மாதத் தொடக்கத்தில் விதை விதைக்கலாம். ஏக்கருக்கு சுமார் 20 ராத்தல் விதையை வரிசைக்கு வரிசை இரண்டடி இடைவெளியும் இருக்கும்படி விதைக்கவேண்டும். விதைப்பின்போது நிலத்தில் அதிக ஈரமோ அல்லது வறட்சியோ இல்லாமல் இருக்கும்படி பார்த்துக் கொள்ளவேண்டும். விதைத்து மூன்று வாரங்களுக்குப் பின் 100 ராத்தல் அம்மோனியம் சல்பேட்டும் பூக்கும் தருவாயில் 100 ராத்தல் அம்மோனியம் சல்பேட்டும் போட வேண்டும். இந்தக் குறுகிய காலப் பருத்தியைப் பயிரிடுவதால் அடுத்து வரும் நெற்பயிர் எவ்வகையிலும் பாதிக்கப்படுவதில்லை.

மனிதனுக்கு நோய் வந்தால் வைத்தியசாலைகளுக்குச் செல்லுகிருன். ஆடு மாடுகளுக்கு நோய் வந்தால் மிருக வைத்திய சாலைக்கு அழைத்துச்செல்லுகிருேம். அதேபோலப் பயிர்களுக்கு நோய் வந்தால் அந்நோயைப்பற்றி ஆராய்ந்து அறிவுரை கூற ஏதேனும் மருத்துவ மனை இருக்கிறதா? ஏனில்லை? தாவர நோய்களைக் கண்டு பிடித்து நோயைக் கட்டுப்படுத்தும் முறைகளையும் சொல்லிக் கொடுத்துக் கோவை விவசாயக் கல்லூரி ஆராய்ச்சி நிலையத்தில் ஒரு தாவர நோய் மருத்துவ மனை திறக்கப்பட்டுள்ளது. விவசாயிகள் தங்கள் நிலத்திலுள்ள பயிர்களுக்கு நோய் கண்டால் உடனே செடியின் பாகங்களை எடுத்து மேற்கூறிய மருத்துவ மனைக்கு அனுப்பி ஆலோசனை பெறலாம்.

நோயால் தாக்கப்பட்ட செடியின் பாகங்களை நன்ருக உலர்த்தி இருபுறமும் அட்டைகளை வைத்துக் கட்டித் தபால் மூலம் அனுப்பலாம். அப்படி அனுப்பப்படும் தபாலில் பின்கண்ட குறிப்புக்களும் இருக்க வேண்டும்.

* மாதிரி எடுத்த இடம்.
* பயிரின் பெயர்.
* ரகம் (தெரிந்திருந்தால்)
* பயிரின் வயது.
* மாதிரி எடுத்த தேதி.
* பயிருக்கிடப்பட்ட உரம்.
* இதர தகவல்கள்

★

மோட்டார் சாமான்களுக்கு
பாரத் ஆட்டோஸ்டோர்ஸ்
போன்: 2359.
89. பட்டர்வர்த் ரோடு. திருச்சி 2.

கரூர் P.S. ராமசர்மாவின்
சக்தி சஞ்சீவி
ஈரல்தலை கட்டிகளுக்குகங்கரற்றது
விபரத்திற்கு எழுதுக.



சென்னையில் இருக்கும் மைலாப்பூர் அக்காடமி காலம் சென்ற ஜனுதிபதி ஜான் எப். கென்னடிக்கு இரங்கற் கூட்டம் நடத்தி அஞ்சலி செலுத்தியது. சிறப்பு அழைப்பின் பேரில் பிரபல இந்தியர்களும், பல நாட்டுத் தூதராகப் பிரதிநிதிகளும் கூட்டத்திற்கு வந்து பேசினர். படத்தில் காண்போர் (இடமிருந்து வலம்): திருமதி ராஜம்மாள் அனந்தராமன், எஸ். பார்த்தசாரதி ஐய்யங்கார், டாக்டர் எஸ். சந்திரசேகரன், அமெரிக்கக் கான்ஸல் ஜெனரல் அலுவலகத்தைச் சேர்ந்த ஜார்ஜ் எம். பென்ஸ்கி, ஜெர்மன் குடியரசின் கான்ஸல் டாக்டர் கெர்ஹார்டு பிஷர், முருகதாஸ், கூட்டத்திற்கு தலைமை வகிக்கும் மேல் சபைத் தலைவர் டாக்டர் பி. வி. செரியன், கே. பாலசுப்பிரமணிய ஐயர் (எம் எல். சி.), பிரெஞ்சு கான்ஸல் ரெனி கிராஸ் சென்னை அமெரிக்கத் தகவல் நிலயத்துத் தகவல் அதிகாரி வில்லியம் ஜி. வில்காக்ஸ், டி. எஸ். ராமஸ்வாமி ஐயர்.

அறியலூர் டி. மு. கோ.
S. C. 1858/63

கல்யாணசுந்தர முதலியார் —வாதி
நடேச உடையார், முத்துஸ்ாமி கோனர், செல்லம்மாள் —பிரதிவாதிகள்

முதல் பிரதிவாதியும், 2-ம் பிரதிவாதியின் தகப்பனுமான இறந்த மொட்டயக் கோனரும் சேர்ந்து வாதிக்கு 19—7—60-ல் ரூ. 200-க்கு எழுதிக் கொடுத்திருக்கும் நோட்டுப்படி முதல் பிரதிவாதி பேரிலும் மொட்டயக் கோனர் மகனை 2-ம் பிரதிவாதி பேரிலும் ரூ. 229-37 கிடைக்க இந்தத் தாவா செய்து ஈங்கி 27-2-64-ல் வைக்கப்பட்டிருக்கிறது.

R. ராமசாமி,
2/6002/163 அட்வகேட்.

அறியலூர் டி. மு. கோ.
I. A. 2/64
O S. 84/62

வள்ளியம்மை வகையரு 2, 3, 4 —வாதிகள்
லெக்ஷ்மி அம்மாள் —பிரதிவாதி

ஷ பிரதிவாதிக்கு ஷ நெம்பரில் தாவா சொத்துக்களை ஏல வின்னப்பம் சரிக்கட்டி கமிஷனர் மூலம் பிரித்து ஸ்வாதீனத்துக்கு பைனல் டிக்கிரி செய்ய வேணுமாய் ஷ 2, 3, 4 வாதிகள் மனுக் கொடுத்து ஒட்டி சார்வு மரு நோட்டீசுக்கு ; உத்திரவாகி ஈரங்கி 24—2—64-ல் வைக்கப்பட்டிருக்கிறது.

R. ராமசாமி,
3/6003/164 அட்வகேட்.

# பழைய பல்லுக்குப் புதிய பல்

பட்டம் பல பெற்ற பெரிய டாக்டராக இருக்கலாம்; அரிய பெரிய ஆராய்ச்சிகளை நடத்தியிருக்கலாம்; பல பெரிய நோய்களின் காரணம் தெரிந்திருக்கலாம்; குணப்படுத்தும் முறையையும் தெரிந்திருக்கலாம். ஏன் திசுக்களின் வளர்ச்சி ரகசியத்தைக்கூட அறிந்திருக்கலாம், ஆனால் ஜலதோஷத்திற்கு காரணம் தெரியாது; அவர்களிடம் அதற்கு மருந்துமில்லை—போகட்டும், பல் ஏன் சொத்தையாகிறது? அதுவும் தெரியாது.

வெறும் ஜலதோஷம் தான் — ஆனால் அது படுத்தும் பாடு சொல்ல முடியாது. ஒவ்வொரு ஆண்டிலும் லட்சக்கணக்கான பேர் அவதிப்படுகின்றனர்; வருமானத்தில் பெரும் தொகை இழக்கப்படுகிறது; உற்பத்தியில் பெரும் அளவு குறைந்து போகிறது.

சொத்தைப் பல் இன்னும் பல தொல்லைகளைக் கொடுக்கக்கூடும். ஆனால் பலர் இதை உணருவதில்லை.

பல் வைத்தியரிடம் போவதைத் தவிர வேறு வழியில்லை என்ற நிலைக்கு பல்வலி கொண்டுவிடும் வரை சொத்தைப் பல்லைப் பற்றி பலர் பொருட்படுத்துவதில்லை. இவர்கள் உணராதது இதுதான்; சொத்தைப் பல் உடலில் வேறு எந்தக் காயத்தைப் போலவே தான்; கையிலோ காலிலோ வெட்டுக்காயம் ஏற்பட்டால் எப்படி நச்சுக் கிருமிகள் உடலுக்குள் புகுந்துவிடுமோ அதேபோல் சொத்தைப் பல்லும் நச்சுக் கிருமிகளுக்கு இடம் கொடுக்கக் கூடும்.

போதிய ஊட்டம்பெற நல்ல பற்கள் தேவை. இதில் ஐயமில்லை. பல்லில்லாமல் நீங்கள் புசிக்கலாம். ஆனால் நீங்கள் ரசித்துச் சாப்பிட முடியாது; அது மட்டுமா, தகுந்த ஊட்டத்திற்கு வேண்டிய பலவகை உணவுகளைப் புசிக்க உங்களால் முடியாதே.

இன்று பல் வைத்தியர்கள் மிக அழகிய, பயனுள்ள செயற்கைப் பற்கள் தருகின்றனர். ஆனால் இயற்கைப் பல் — அதுதான் அசல் பல் - தான் நல்லது என்று கூறுபவர்களில் முதன்மையாக இருப்பவர்களும் இந்தப் பல் வைத்தியர்கள் தாம்.

இப்பொழுது உங்களுக்கு ஒரு வியப்புக் காத்திருக்கிறது.

பென்சில்வேனியா மாநிலத்தில் இருக்கும் பிலடெல்பியா நகரிலிருந்து கிடைத்த ஒரு செய்தி உங்கள் பல் வைத்தியர் உங்களுக்கு அசல் பல் தரக்கூடிய நாள் விரைவில் வரப்போகிறது என்பதைக் குறிப்பிடுகிறது.

டாக்டர் ரால்ப் மெஸ்ரோ என்பவர் பிலடெல்பியாவில் இருக்கும் ஆல்பெர்ட் ஈன்ஸ்ட்டின் மருத்துவ நிலையத்தைச் சேர்ந்தவர். பல் சொத்தையாகி உதிர்ந்து போகும் பிரச்னையை இவர் சில காலமாக எடுத்துக்கொண்டு ஆராய்ந்து வரலானார். ஒரு பல் விழுந்துவிட்டால் காலி இடம் ஏற்படுகிறது. இந்த இடத்தில் புதுப்பல் பொருத்தாவிடில் விழுந்த பல்லின் இரு பக்கத்திலும் இருக்கும் பற்கள் காலி இடத்தில் சாய்கின்றன. இது மற்றப் பற்களுக்கிடையே பொந்துகள் விழக் காரணமாகிறது. இந்தப் பொந்துகளில் உணவு தங்கி, மேலும் பல பற்கள் சொத்தையாகிப் போகின்றன.

இதைத்தடுக்கத்தான் பல் வைத்தியர்கள் செயற்கைப் பல்லைப் பொருத்துவது வழக்கம். ஆனால் டாக்டர் மெஸ்ரோ 1959-ம் ஆண்டிலிருந்து ஒரு புது ஆராய்ச்சியைச் செய்து வருகிறார். அதுதான் உயிருள்ள உண்மையான பற்களைப் பெயர்த்து ஒட்டுவது. அவர் இவ்வாறு ஒட்ட வைத்த பற்கள் மூன்றாண்டுக்காலம் நன்றாகப் பணி செய்து வந்துள்ளன. ஒரு இளம் பெண்ணுக்கு இவ்வாறு ஐந்து பற்கள் பொருத்தப்பட்டன. பொருத்தப்பட்டு மூன்றரை ஆண்டுகளுக்கு மேலான ஒரு பல்லை அண்மையில் பெயர்த்துப் பார்த்தபோது அது சாதாரணமாக இருக்கக் கண்டார்.

பல்லைப் பெயர்த்து எப்படி ஒட்ட வைக்கிறார் டாக்டர் மெஸ்ரோ? பொருத்தப்படும் பல்லை அதனிடத்தில் பிடித்து வைத்திருப்பது எப்படி.

முதலில் பல்லீற்றில் புதுப் பல்லைப் பொருத்த தொளை ஒன்றைச் செய்கிறார். பிறகு அப் பல்லைக் கெட்டியாகப் பிடித்துக் கொள்ள பிளாஸ்டிக் பிடி ஒன்றைப் பயன்படுத்துகிறார் அவர். இந்த அறுவை மருத்துவத்திற்கு ஏறத்தாழ ஒரு மணி நேரம் ஆகிறது.

சரி, இந்தப் புதிய அசல் பற்கள் எங்கிருந்து கிடைக்கின்றன? சில பேருக்கு வாய் நிறையப் பற்கள் இருப்பதைக் காண்கிறோம். தாடைகள் கொள்ள முடியாதபடி அடைத்திருக்கின்றன இப்பற்கள். எனவே சிலவற்றை நீக்கிவிடலாம்.

அவ்வாறு நீக்கப் பெற்ற பற்கள் "பல் பாங்கில்" சேமித்து வைக்கப்படுகின்றன. உப்புக் கரைசலில் நனைக்கப் பெற்ற மெல்லிய துணியில் பற்களை சுற்றி குளிர்ப்பதன பெட்டியில் வைத்து குறைந்தது மூன்று வாரங்களுக்கு வைக்கலாம் என்று கண்டுபிடித்துள்ளார் டாக்டர் மெஸ்ரோ. இந்த வழியில் முன் கூட்டியே கையிருப்பு வைத்துக் கொள்வது சாத்தியமாகும்.

பல் ஒன்று தேவையாக இருப்பவர் டாக்டர் மெஸ்ரோவிடம் வரும் போது அவர் பல் பாங்குக்குச் சென்று தகுந்த பல் ஒன்றைப் பொருத்திக் கொள்வார். பல்லின் நிறம் வகை முதலியவை பொருந்தும்படி இருக்க அவர் முயலுகிறார். ஏனெனில் பல்லின் வகையும் நிறமும் ஆளுக்கு ஆள் மாறக்கூடியவையாகும்.

வயது வரம்பு உண்டா? உண்டென்று கருதவில்லை டாக்டர் மெஸ்ரோ. அவருடைய நோயாளிகளில் பெரும்பாலோர் இளைஞர்கள்தான். 20 வயதுக்குட்பட்டவர்கள். ஆனால் வயதானவர்களுக்கும் கூட அவர் பல் ஒட்ட வைத்திருக்கிறார். எனவே இந்த முறை எந்த வயதிலும் ஏன் செயல்படாது என்று கேட்கிறார் அவர். ஒட்டவைக்கப்படும் பற்களின் வயதுகூட மாறுபட்டிருப்பது ஒட்ட வைக்கும் பணிக்குத் தடங்கலாக இருப்பதில்லை.

முழு வளர்ச்சி பெற்ற பற்களைத்தான் இந்த மருத்துவர் தமது சிகிச்சையில் பயன்படுத்தி வந்தாலும் ஈறுக்கு வெளியே கிளம்பாத பற்களையும்கூட அவர் பயன்படுத்தியுள்ளார். ஒட்ட வைக்கப்பட்ட பிறகு இந்த இருவகை பற்களும் புது இடத்தில் நன்றாகவே வளர்ந்திருக்கின்றன.

பல் ஒட்ட வைக்கும் அறுவை மருத்துவ வெற்றியின் இரகசியம் இதுதான்; வெளியே இருந்து வரும் திசுக்களை ஒழிப்பது உடலின் இயல்பு. ஆனால் பற்களைப் பொருத்தமட்டில் இந்தத் தன்மை இல்லை. இதுவரை கெட்ட விளைவுகள் ஏதும் அறிவிக்கப்படவில்லை என்று கூறுகிறார் டாக்டர் மெஸ்ரோ.

கண்ணின் விழிவெண்படலம் வெற்றிகரமாக ஒட்ட வைக்கப்பட்டதை யொட்டி பல்லும் வெற்றிகரமாக ஒட்ட வைக்கப்படுகிறது. இரத்தக் குழாய்கள் அதிகமாக இருக்கும் திசுக்கள் விஷயத்தில் தான் தொல்லை ஏற்படும் என்று நம்புகிறார் டாக்டர் மெஸ்ரோ. விழி வெண் படலத்திற்கோ பல்லுக்கோ இந்தத் தொல்லை இல்லை.

டாக்டர் மெஸ்ரோ கூறுவது சரிதான் என்று நிருபிக்கப் பெற்று மக்களும் இழந்த பற்களுக்குப் பதில் புதிய பற்களை ஒட்டவைத்துக் கொண்ட பிறகு, புதிய பற்கள் வேரூன்றாமல் செத்து விட்டால் என்ன ஏற்படும்? இந்த அமெரிக்க பல் அறுவை மருத்துவர் கூறுகிறபடி பல் தானாகவே விழுந்துவிடுவதைத் தவிர வேறு ஒன்றும் நிகழாது; அதுவும் இரண்டு மூன்று ஆண்டு அது பயன்பட்ட பிறகுதான் விழும்.

★

# தொழில் துறை

(2-ம் பக்கத் தொடர்ச்சி)

தகைய முன்னேற்றங்கள் இப்பொழுது இன்னும் அதிவேகமாக ஏற்பட்டு வருகின்றன என்ற கருத்துக்கு ஆதாரமாக பல எடுத்துக்காட்டுக்களையும் டாக்டர் பிராங்க்ளின் கூறினார். தொழில் துறையிலிருந்து பார்க்கையில் வரலாறு திரும்பவும் எழுதப் பெறலாம் என்று அவர் சுட்டிக்காட்டினார்.

அமெரிக்காவில் நடந்த உள்நாட்டுப் போரின் துவக்க காலத்தில் தொழில் வளம் மிகுந்த வட பிரதேசத்தின் பொருளாதாரம் போர் முயற்சிக்கு ஈடு கொடுத்துக் கொண்டு வளர்ந்து வந்ததென்றும் ஆனால் தென் பிரதேசத்தின் பொருளாக சீரழிந்து போயிற்று என்றும் அவர் கூறினார்.

"இப்பொழுது அமெரிக்காவில் தொழில் துறை உற்பத்தி ஒரு நபருக்கு இவ்வளவு என்ற அடிப்படையில், பிரிட்டனின் உற்பத்தியை விட இரண்டு பங்கு அதிகம்; போட்டியில் அடுத்தப்படி வரும் ஜப்பானின் உற்பத்தியைவிட ஏழு மடங்கு அதிகம்; இதற்கு அமெரிக்கத் தொழில் துறைப் பொறி இயலும் தொழில் ஸ்தாபனங்களும் தான் காரணம் என்றார் டாக்டர் பிராங்க்ளின்.

தொழில் ஸ்தாபனம், தொழில் துறை பொறி இயல் பற்றி இரு கருத்துக்கள் உள்ளன. சர்வாதிகார ஆட்சியின் கீழுள்ள தேங்கிப்போன சமுதாய நிலையிலிருந்து கூறப்படும் கருத்து ஒன்று; சுதந்திர முயற்சிக்கு வாய்ப்புள்ள சமுதாயத்திலிருந்து கூறப்படும் கருத்து மற்றது. மூச்சு பேச்சில்லாமல் சொன்னபடி கேட்டு, முன் கூட்டி வகுக்கப்பட்ட பாதையில் செல்ல வேண்டுமென்று பணிக்கப்பட்டுள்ள தொழிலாளர்களை புற்றிலுள்ள வெறும் எறும்பு போல் கருதும் உயிரற்ற கொள்கையுடைய தொழில் ஸ்தாபனம் தொழில் முயற்சிக்கும் ஊக்கமும், சிறந்த முறைகளை மேலும் மேலும் தேடுவதில் தொடர்ந்து நாட்டம் கொண்டுள்ள உயிர் துடிப்புள்ள சமுதாயத்தின் தொழில் பொறி இயலுக்குமுள்ள வேற்றுமையை டாக்டர் பிராங்க்ளின் விளக்கிறார்.

தொடர்ச்சியான புத்தம் புதிய கண்டுபிடிப்புகள் தாம் அமெரிக்க தொழில் துறைப் பொறி இயல் வளர்ச்சியின் வெற்றிக்குக் காரணம்; இந்தத் தன்மையை பட்டம் பெறும் மாணவர்கள் கிரகித்துக் கொள்ள வேண்டும் என்று கேட்டுக் கொண்ட டாக்டர் பிராங்க்ளின் மாணவர்கள் இவ்வாறு செய்வதன் மூலம் மாபெரும் இந்திய ஜனநாயகத்தின் வளர்ச்சிக்கும் அதன் எதிர்கால முன்னேற்றத்திற்கும் வரலாற்றுப் புகழ் தரக்கூடிய பணியைச் செய்ய முடியும் என்றும் அவர் கூறினார்.

★









# பொதுத்துறையில் கப்பல் போக்கு வரத்துத் தொழிலின் முன்னேற்றம்

கப்பல் போக்கு வரத்துத் துறையில் ஈடுபட்டு வரும் பொதுத்துறை நிறுவனமான இந்திய கப்பல் போக்கு வரத்துக் கார்ப்பொரேஷன் மூலம் மத்திய சர்க்காருக்கு ஆண்டு தோறும் 100 லட்சம் ரூபாய்க்கும் மேலேயே வருமானமாகிடைத்து வருவது பலருக்குத் தெரியாததாகும். நாட்டில் கப்பல் போக்கு வரத்தில் ஈடுபட்டு வருகிற கப்பல்களின் மொத்த டன் நிறையில், இந்நிறுவனத்தின் மொத்த பங்கு ஐந்திலொரு பகுதியாக இடம் பெற்றிருப்பதும் இங்கு குறிப்பிட்டதாகும்.

இக் கார்ப்பொரேஷனின் அனுமதிக்கப்பட்ட மூலதனம் மொத்தம் 35 கோடி ரூபாய் ஆகும்; அதன் செலுத்தப்பட்ட மூலதனம் 23·45 கோடி ரூபாய் ஆகும்.

இந் நிறுவனத்தின் அமைப்புக்கு 1950-ம் ஆண்டிலேயே வித்திடப்பட்டது. அவ்வாண்டிலே தான் கிழக்குப் பிராந்தியக் கப்பல் போக்குவரத்துக் கார்ப்பொரேஷன் அமைக்கப்பட்டது; இந்தியக் கப்பல் போக்குவரத்துக் கம்பெனிகளிடையே நம்பிக்கையை ஊட்டுவதற்காகவும், அவற்றின் நடவடிக்கைகளை விஸ்தரிப்பதில் ஊக்கமளித்து வருவதற்காகவும் இக் கார்ப்பொரேஷனின் பங்கு முதலீட்டில் சர்க்காரும் கலந்து கொண்டனர்.

இக்கொள்கை நல்ல பயனைத் தந்தது. பின்னர் 1956-ம் ஆண்டு வாக்கில் இக் கார்ப்பொரேஷன் முற்றிலும் சர்க்காருக்குச் சொந்தமானதொரு நிறுவனமாக மாற்றப்பட்டது. அதே ஆண்டில் மேற்குப் பிராந்திய கப்பல் போக்கு வரத்துக் கார்ப்பொரேஷன் என்ற பெயரில் மற்றொரு கார்ப்பொரேஷனும் அமைக்கப்பட்டது. இறுதியில் இரண்டு நிறுவனங்களும் "இந்தியக் கப்பல் போக்குவரத்துக் கார்ப்பொரேஷன் லிமிடெட்" என்ற பெயரில் புதிய நிறுவனமாக ஒன்றுக்கப்பட்டன.

கப்பல் போக்குவரத்து நிறுவனத்தின் வருமானம் படிப்படியாகப் பெருகி வந்துள்ளது. 1961–62-ம் ஆண்டில் பெற்ற மொத்த வருமானம் 8·13 கோடி ரூபாய் ஆகும்; 1962–63-ம் ஆண்டில் அது 10·63 கோடி ரூபாயாகப் பெருகியது. நிறுவனம் ஏற்றிச் சென்ற சரக்குகளின் அளவு 1961–62-ம் ஆண்டில் வருமான இனங்களின் வகையில் 8·7 லட்சம் டன்னாக இருந்தது, 1962–63 11.9 லட்சம் டன்னுக்குப் பெருகியது. அதாவது, 37 சதவிகிதம் அதிகரிப்பு அதில் ஏற்பட்டிருந்தது. நிறுவனத்தின் நிகர வருமானம் 1961–62-ம் ஆண்டு ரூ. 107 லட்சமாக இருந்தது. 62-63–ல் 132 லட்சம் ரூபாய்க்கு மேல் பெருகியிருந்தது.

நிறுவனத்தின் கப்பல்கள், எண்ணெய்க் கப்பல்கள் ஆகியவற்றின் எண்ணிக்கையிலும் அவற்றின் மொத்த டன் நிறையிலும் படிப்படியான அதிகரிப்பு ஏற்பட்டு வந்திருக்கிறது. அதற்கு இப்பொழுது மொத்தம் 29 கப்பல்கள் உள்ளன. அவற்றின் மொத்த டன் நிறை 2,20,281 டன்னாகும்; 1961- அக்டோபர் மாதத்தில் அதற்கு 19 கப்பல்கள் இருந்தன. (டன் நிறை 1,38,598.) இக் கப்பல் நிறுவனம் ஜப்பான், போலந்து, ஆகிய நாடுகளிலுள்ள கப்பல் கட்டும் தளங்களுக்கும், விசாகப்பட்டணத்திலுள்ள ஹிந்துஸ்தான் கப்பல் கட்டும் தளத்துக்கும் மொத்தம் 18 கப்பல்களை கட்டுவதற்கு ஆர்டர்களைக் கொடுத்துள்ளன. விசாகப்பட்டணம் ஹிந்துஸ்தான் கப்பல் கட்டும் தளத்தின் பிரதான வாடிக்கைக்காரர்களில் இக்கப்பல் நிறுவனமும் ஒன்றாகும். நிறுவனத்துக்குச் சொந்தமான ஜி. ஆர். டி. கப்பல் டன் நிறை அடுத்த நான்கு ஆண்டு காலத்துக்குள் 50 லட்சம் டன்னை எட்டிவிடுமென்றும் மதிப்பிடப்பட்டுள்ளது.

கார்ப்பொரேஷனுக்குச் சொந்தமாக 2 எண்ணெய்க் கப்பல்களும் உள்ளன. அவை முறையே பர்மாஷெல் நிறுவனத்துக்கும், கால்டெக்ஸ் நிறுவனத்துக்கும் கொடுக்கப்பட்டுள்ளன. மூன்றுவது எண்ணெய்க் கப்பல் ஒன்றுக்காக ஜப்பானிய நிறுவனம் ஒன்றிடம் சமீபத்தில் ஆர்டர் கொடுக்கப்பட்டுள்ளது.

அக்கப்பல் நீண்ட கால அடிப்படையில் கால்டெக்ஸ் நிறுவனத்துக்குக் குத்தகைக்கு விடப்படும். இது தவிர பெரிய எண்ணெய்க் கப்பல் ஒன்றும் கட்டப்பட்டு வருகிறது.

வெளிநாடுகளுக்கான எண்ணெய்க் கப்பல் போக்கு வரத்து வர்த்தகத்திலும் இவ்வாண்டு முதல் ஈடுபட இது உத்தேசித்திருக்கிறது.

கார்ப்பொரேஷனுக்கு இப்பொழுது சொந்தமாக இருந்து வருகிற 2 எண்ணெய்க் கப்பல்களையும், நிலக்கரி, வெட்டுமரம் ஏற்றிச் செல்லுவதற்காக 3 கப்பல்களையும் தவிர நிறுவனத்தின் இதர கப்பல்களை அனைத்தையும் வெளிநாட்டு வர்த்தகத்தில் ஈடுபடுத்தி வருவதும் குறிப்பிடத்தக்கதாகும்.

நிறுவனத்தின் கப்பல்கள் 1961 ஆகஸ்டு மாதம் முதற்கொண்டு இந்தியா–பாகிஸ்தான், இந்தியா - பிரிட்டன், – ஐரோப்பியத் துறைமுகங்கள் கப்பல் போக்கு வரத்து மார்க்கங்களில் இயங்கி வருகின்றன. கார்ப்பொரேஷன் நடவடிக்கைகள் இந்த மார்க்கங்களில் விஸ்தரிக்கப்பட்டிருப்பது குறிப்பிடத்தக்கதொரு முன்னேற்றமாகும்.

இந்திய– அமெரிக்கக் கப்பல் போக்கு வரத்து மார்க்கத்திலும் இந்நிறுவனம் சமீபத்தில் இறங்கியுள்ளது. கார்ப்பொரேஷன் இப்பொழுது 7 மார்க்கங்களில் சரக்குப் போக்கு வரத்து சேர்விசுகளையும், மூன்று மார்க்கங்களில் பிரயாணிகள் போக்கு வரத்துடன் கூடியதான சரக்குப் போக்குவரத்து சேர்விசுகளையும் வெளி நாடுகளுடன் நடத்தி வருகிறது.

கார்ப்பொரேஷன் அதன் வர்த்தகத் துறை தேவைகளை சமாளித்து வருவதற்கு வசதியாக அவசியப்படும் பொழுது அவ்வப்போதைக்கு மார்க்கெட்டிலும் கப்பல்களை வாடகைக்கு எடுத்து உபயோகித்து வருகிறது. இந்தியாவின் ஏற்றுமதிகளை பெருக்கி வரும் பொருட்டு அவ்வளவாக லாபம் தராத மார்க்கங்கள் சிலவற்றிலும் கப்பல் போக்கு வரத்து சேர்விசுகளை முறைப்படி நடத்தி வருகிறது.

கப்பல் போக்கு வரத்துத் தொழிலில் கூட்டுறவுத் துறையும் பங்கு கொள்வதற்கு ஊக்கமளித்து வரும் பொருட்டு பாரசீக வளைகுடாப் பிரதேசத்திலுள்ள துறைமுகங்களுக்கு வாழை பழங்களையும் ஏற்றிச் செல்வதற்காக, மகாராஷ்டிர ராஜ்ய கூட்டுறவு விற்பனைச் சங்கத்தின் சார்பில் கப்பல் ஒன்றை அது நடத்தி வருகிறது.

இறுதியாக 1961–ம் ஆண்டு பிற்பகுதியில் கடலோர வர்த்தகப் போக்கு வரத்தில் அது ஈடுபட்டது; குறிப்பாக கிழக்கு, மேற்குக் கடற்கரையிலுள்ள துறைமுகங்களுக்கு கல்கத்தாவிலிருந்து நிலக்கரியும், அந்தமானிலிருந்து வெட்டு மரங்களையும், பர்மாவிலிருந்து அரிசியையும் எடுத்துச் செல்வதற்காக அவ்வர்த்தகத்தில் அது ஈடுபட்டது அதன் அலுவல்களில் குறிப்பிடத்தக்கதொன்றாகும்.

இந்தியாவுக்கும், அந்தமான் நிக்கோபார் தீவுகளுக்குமிடையே மத்திய உள் விவகார மந்திராலயத்தின் சார்பில், எம். வி. "அந்தமான்" எம். வி. "நிக்கோபார்" என்ற பெயரில் இரண்டு கப்பல்களையும் அது நடத்தி வருகிறது. இது தவிர, அந்தமான் நிக்கோபார் தீவுகளில், பல்வேறு தீவுகளுக்கிடையேயான போக்குவரத்துக்கென எஸ். எஸ். "சலுங்கா" என்ற கப்பல் ஒன்றையும் அது நடத்தி வருகிறது.

★




**அரியலூர் டி. மு. கோ.**

H. R. C. 2/64

கமலத்தம்மாள் - மனுதார்
1. A. V. நாராயணமய்யர், 2. N. வெங்கிடாஜலம், A. N. கிருஷ்ணமூர்த்தி — எதிர்மனுதார்கள்

மனுவில் கண்ட காரணங்களுக்காக உங்களை மனுவில் கண்ட க்கடையிலிருந்து Eviet செய்ய வேணுமாய் மனுக் கொடுத்து உங்கள் மரு நோட்டீசை ஒட்டி சார்வு செய்யவும் பிரசுரம் செய்யவும் உத்திரவாகி 29—2—64 ந் தேதி வாய்தா போடப்பட்டிருக்கிறது ஆஜராகி ஆக்ஷேபனையைத் தெரிவித்துக் கொள்ள வேண்டியது.

N. V. Rengaswami Iyengar
1/6001/162 அட்வகேட்.

(முதற் பக்கத் தொடர்ச்சி)

களை நம்பித்தான் சுதந்திராக் கட்சியை ஆரம்பித்து நடத்துகிறார் ராஜாஜி. காங்கிரஸ் ஒரு ராட்சதன் போலவும் பிசாசைப் போலவும் அவருடைய கண்களுக்கு இப்பொழுது தோற்றமளிக்கிறது. சென்னை மாநகராட்சித் தேர்தல் பிரசாரங்களில் இந்த உவமைகளை அவர் கூறி வருகிறார்.

ஏற்றத் தாழ்வென்பது பொருளாதார அடிப்படையில் தோன்றுவதுதான், ஜாதி, மொழி, இனம் என்ற பிரிவினைகள் யாவும் நல்ல சுபிட்சம் உள்ள நாட்டில் மறைந்து விடும். தனியார் சிலர் மட்டும் தங்கள் உரிமைகளை விடமாட்டோம் என்று மறுப்பதன் பொருள் என்னவென்றால் இந்தப் பிரிவினைகள் யாவும் நிரந்தரமாக இருக்க வேண்டுமென்ற ஆசைதான், அவை யாவும் காங்கிரசின் ஜனநாயக சமதர்ம அடிப்படையின் காரணமாகத் தகர்ந்து போய்விடுமோ என்ற அச்சந்தான்.

எனவே மக்கள் உண்மையான அரசியல் பொருளாதார உண்மைகளைத் தெளிவாகப் புரிந்துகொள்ள வேண்டும். தனிப்பட்டவர்கள் தங்கள் சந்ததிகளைப் பற்றிக் கவலைப்படும் நிலைமை மாறிப்போக வேண்டும். சமுதாயம் தன்னிறைவு உடையதாக அமைந்து விட்டால் மக்கள் யாவரும் நல்வாழ்க்கை பெறுவர்.

அப்போது பஞ்சமும், நோயும், பகையும், பிணியுமற்றவர்களாக எல்லா மக்களும் மகிழ்ந்து வாழ்வார்கள். அப்படியொரு சமுதாயம் தோன்றுவதற்காக, இந்த நாளில் சில கஷ்ட நஷ்டங்களைப் பொறுத்துக்கொள்ள வேண்டிய கடமை நம்மில் ஒவ்வொருவருக்கும் இருக்கிறது.

விடுதலைப் போரில் உயிரையும் இழந்தவர்கள் மகத்தான தியாகிகள் என்று கொண்டாடுகிறோம். விடுதலை பெற்ற நாட்டில் மிக விரைவில் ஒரு சமதர்ம சமுதாயம் மலர்வதற்காக இடையில் சில ஆண்டுகள் சிரமத்தை அனுபவிக்கும் ஒரு தலைமுறையைச் சேர்ந்த மக்கள் யாவருமே தியாகிகள்தாம். இந்தத் தியாகத்தை நாம் செய்தால் தான் அமைதியான – ஜனநாயக முறையில் சமதர்மம் மலரும்.

புரட்சியும், போரும், கிளர்ச்சியும் கொண்டு சமதர்மம் காண்பது கம்யூனிஸ்ட் வழி. அதை விடுத்து நமது பண்புக்கும் இயல்புக்கும் ஏற்ற வழியில் யாரும் நோகாமல் அமைதியான புதிய சமுதாயத்தை ஜனநாயக முறையில் காங்கிரஸ் உருவாக்கி வருகிறது. காங்கிரஸ் எதிர்ப்பு என்பது ஜனநாயகத்தை வேண்டாமென்று மறுப்பதாகவே முடியும். இதைத் தான் மக்கள் மறக்காமல் நினைவில் பதிக்க வேண்டும்.

★

Edited & Published by its owner Sri. Triloka Sitaram & Printed by him at his Shivaji Newsprinters, 24, A-Theradi Bazaar, Tiruchy-2.
Annual Subscription Including 4 Special Numbers : Individuals Rs. 5 Institutions Rs. 10. Single copy six nP. Madras office: 12/2 Nallathambi Mudali St., Triplicane Madras-5.)